# குரு தத்துவம்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா



இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# குரு தத்துவம்

அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

பேராசிரியர். திரு. ப. உருத்திரமணி, M. A.,




வெளியிடுவோர் :

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா.

விலை ] 1979 [ ரு 3-00



Translation of :

**"GURU TATTWA"** in Tamil



Printed out of the magnanimous donation of:

*Humble Servant of the Holy Master*

H. H. SRI SWAMI SIVANANDA

---

Printed at The Literary Press, Salem-636 001

# பொருளடக்கம்

# குரு தத்துவம்



## ஸ்ரீ சுவாமி சிவானந்தா

## படலம் ஒன்று

### குருவின் பணி

"அஞ்ஞான திமிராந்தஸ்ய ஞானாஞ்ஜன சலாகயா
சக்ஷுருன் மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீ குருவே நம:"

அஞ்ஞான இருளால் பார்வையற்றுப் போனவர்க்கு ஞானம் என்னும் அஞ்ஜனக் கோலால் கண்களைத் திறந்து விடும் குருவுக்குப் பணிவான வணக்கங்கள். – குரு கீதை

சாதகனே, மானிடச் சட்டை சாத்தி வந்து வழிப்படுத்தும் தெய்வமே குரு. இறைவனின் கருணையே குருவின் வடிவை எடுக்கின்றது. குருவைக் காண்பது இறைவனைக் காண்பதேயாகும். குரு இறைவனோடு ஐக்கியமாகியுள்ளார். அவர் அனைவர் உள்ளங்களிலும் பக்திப் பெருக்கைத் தோற்றுவிக்கின்றார். அவருடைய முன்னிலையில் அனைவரும் புனிதமாகின்றனர்.

தனிப்பட்ட ஒருவரையும் இறைவனையும் இணைக்கின்ற பாலமே குரு. இதுவாக இருந்து அதுவாகத் தம்மை உயர்த்திக் கொண்டவரே குரு. எனவே இருவகை நிலைகளிலும் அவர் தடையின்றி உலவக் கூடியவர். இருந்தபடியே அவர் அமரத்துவத்தின் வாசலில் நிற்கின்றார். முன்னேறத் தத்தளிக்கும் சாதகர்களைக் குனிந்து ஒரு கையால் அவர் உயரத் தூக்கிவிடுகின்றார்; முடிவற்ற மெய்யுணர்வும் அழிவற்ற பேரின்பமும் ஆகிய பேரரசு நிலைக்கு, மற்றொரு கையால் தூக்கி விடுகின்றார்.

# 2

## சத்குரு

நூல்களைப் படிப்பதனால் மட்டுமே ஒருவர் குருவாகி விட முடியாது. வேதங்களைப் பயின்று அனுபவத்தால் நேரடியாக ஆத்மஞானம் பெறுகிறவரே குருவாக ஏற்றுக்கொள்ளப் படுவார். ஜீவன் முக்தர் அல்லது பந்தங்களினின்று விடுபட்ட ஞானியே உண்மையான குரு அல்லது ஆன்மீக வழிகாட்டியாவார். அவரே சத்குரு, பிரம்மம் அல்லது பரம்பொருளும் அவரும் ஒருவரே. அவர் பிரம்மத்தை அறிந்தவர்.

சித்திகள் கைவரப் பெற்றிருப்பது ஒரு ஞானியின் பெருமையைப் பறைசாற்றும் தேர்வாகவோ அல்லது அவர் மெய்யுணர்வு பெற்றமைக்கான நிரூபணமாகவோ கொள்ளப்பட மாட்டாது. அற்புதங்களையோ சித்திகளையோ சத் குருக்கள் காட்டுவதில்லை. சாதகர்களின் உள்ளங்களில் நம்பிக்கையை ஊட்டவும், ஊக்குவிக்கவும், தெய்வீகச் சக்திகள் உண்டென்ற உண்மையை நிலைநாட்டவும் அவர்கள் சில சமயங்களில் அவற்றைக் காட்டலாம். சத் குருவினிடம் கணக்கற்ற சித்திகள் அடங்கியுள்ளன. இறைவனின் எல்லாச் செல்வங்களும் தெய்வீக ஐஸ்வர்யங்களும் அவருடைய உடைமைகளாகும்.

சத்குரு பிரம்மமே ஆவார். அவர் கருணைக் கடல்; ஞான சாகரம்; பேரின்ப வெள்ளப் பெருக்கு, அவர் உன் இதயத் தலைவர். உவகையின் ஊற்று. உனக்கு ஏற்படும் தடைகளையும், துயரங்களையும், துன்பங்களையும் அவர் களைந்தெறிகின்றார். நேரான தெய்வீகப் பாதையை அவர் உனக்குக் காட்டித் தருகின்றார். உன் அறியாமைத் திரையை அவர் கிழித்தெறிகின்றார். அமரனாகவும் தேவனாகவும்

உன்னை அவர் உருவாக்குகின்றார். உன் கீழான மிருகத்தனமான இயல்பை அவர் முற்றிலும் மாற்றி விடுகின்றார். அவர் உனக்கு ஞானக் கயிற்றைத் தந்து, நீ இந்த சம்சார சாகரத்தில் மூழ்கிவிடும் போது உன்னை மேலே தூக்கிவிடுகின்றார். வெறும் மனிதனாக அவரைக் கருதாதே. அவரை ஒரு மனிதன் மட்டுமே என்று நீ கருதினால், நீ அறிவில்லாத விலங்காவாய். குருவை வணங்கு; பணிவுடன் அவருக்கு உன் வணக்கத்தைச் செலுத்து.

குருவே தெய்வம். அவர் சொல்லும் ஒவ்வொரு சொல்லும் இறைவனுடைய சொல்லே. அவர் எதையும் கற்றுத்தர வேண்டியதில்லை. அவர் முன்னிலையில் இருப்பது அல்லது அவரோடு உடனிருப்பது கூடக் கிளர்ச்சி தருவதாகவும் ஊக்கத்தை ஊட்டுவதாகவும் நம்மை மேன் மேல் உயர்த்துவதாகவும் உள்ளது. அவருடன் கூடியிருப்பது கூட நம் ஐயங்கள் தாமாக அகலக் காரணமாகிறது. அவரோடு உடனுறைதல் ஆன்மீகக் கல்வியாகிறது. 'ஸ்ரீ கிரந்த் சாஹிப்' நூலைப் படி; அதைப் படிப்பதனால் குருவின் பெருமையை நீ அறிவாய்.

மனிதன் இன்னொரு மனிதனிடத்திலிருந்து தான் கற்றுக் கொள்ள முடியும். எனவே தான் இறைவன் ஒரு மனித சரீரத்தின் வாயிலாகக் கற்பிக்கின்றார். மனித இலட்சியத்தின் நிறைவை நீ உன் குருவினிடத்தில் காண்கிறாய். உன்னை உருவாக்கிக் கொள்ள நீ விரும்பும் முன் மாதிரியாக அவர் இருக்கின்றார். இத்தகைய மகாத்மா வணங்கத் தக்கவர் என்றும் மதிக்கத் தக்கவர் என்றும் உன் உள்ளம் உடனே ஒப்புக் கொள்ளுகின்றது.

முக்தியின் வாசலாகக் குரு இருக்கின்றார். தன்னை மறந்த மெய்யுணர்வு நிலைக்கு அழைத்துச்

செல்லும் வாசல் வழியாகவும் அவர் இருக்கின்றூர். ஆனால் அவ்வழியாக நுழையும் பொறுப்பு சாதகனுக்கு உரியது. குரு, துணையாக மட்டும் இருக்கின்றூர். ஆனால் நடைமுறைச் சாதனை முயற்சிகள் யாவும் சாதகனுடைய பொறுப்பாகும்.

## குருவின் இன்றியமையாமை

ஆன்மீகப் பாதையில் செல்லத் தொடங்குபவருக்குக் குரு மிகவும் இன்றியமையாதவர். எரியும் விளக்கில் தான் இன்னொரு விளக்கை ஏற்ற முடியும். அதைப் போலவே ஞான விளக்காக உள்ள ஒருவரே இன்னொருவருக்கு ஞான ஒளியை ஊட்ட முடியும்.

சிலர் தாமாகவே சில ஆண்டுகட்குத் தியானம் செய்கின்றனர். நாளடைவில் அவர்கள் குருவின் தேவையை உள்ளபடியே உணர்கின்றனர். வழியில் சில தடைகளை அவர்கள் சந்திக்கிறூர்கள். காலிடறி விழச் செய்யும் இம் முட்டுக் கட்டைகளை அல்லது தடைகளை எவ்வாறு நீக்குவதென்று அவர்கட்குத் தெரிவதில்லை. பின்னர் அவர்கள் ஒரு குருவைத் தேடத் தொடங்குகின்றனர்.

ஏற்கனவே பத்ரிநாத்துக்குப் போய் வந்த ஒருவர் தான் அங்கு போய்ச் சேரக் கூடிய வழியைப் பற்றி உன்னிடம் சொல்ல முடியும். ஆன்மீகப் பாதையைப் பொறுத்தவரைக்கும், உன் வழியைக் கண்டுகொள்வது இன்னும் கொஞ்சம் கடினமாகும். அடிக்கடி உன் மனம் உன்னை நெறி வழுவச் செய்யும். மறைந்துள்ள ஆபத்துக்களையும் பிற தடைகளையும் நீக்கிச் சரியான வழியில் குரு உன்னை அழைத்துச் செல்ல முடியும். 'இப் பாதை முக்திக்குரியது; இது பந்தத்திற்குரியது' என்று அவர்

உன்னிடம் தெரிவிப்பார். அவருடைய உதவியின்றி நீ பத்ரிநாத்துக்குச் செல்ல விரும்பலாம்; ஆனால் நீயோ முடிவில் டில்லியை அடைந்திருப்பாய்.

வேதங்கள் அடவியைப் போன்றவை. இரு பொருள் படும் பகுதிகள் உள்ளன. முரண்பட்ட பகுதிகளும் உள்ளன. புரியாத புதிர்களாகவும் மாறுபட்ட கருத்துள்ளனவும், மறைபொருளில் உள்ளனவுமாகிய பகுதிகளும் உள்ளன. வேறு நூல்களிலிருந்து காட்டப்படும் மேற்கோட் பகுதிகளும் உள்ளன. சரியான பொருளை உனக்கு விளக்கிச் சொல்லக் கூடிய குரு அல்லது போதகர் உனக்குத் தேவைப்படுகிறார். பொருள் மயக்கங்களையும், ஐயங்களையும் அறவே போக்கிப் போதனைகளின் சாரத்தை அவர், உன்முன் நீட்டுவார்.

ஆன்மீகப் பாதையில் முன்னேற விரும்பும் ஒவ்வொரு சாதகனுக்கும் குரு முற்றிலும் இன்றியமையாதவர். உன் குறைபாடுகளைக் குருதான் கண்டுகொள்ள முடியும். உன்பால் உள்ள 'நான்' என்ற அகந்தையின் இயல்பு உன் குறைபாடுகளை நீ கண்டு கொள்ள முடியாமல் செய்கிறது. தன் முதுகை ஒருவன் தானே காண முடியாததுபோல், ஒருவன் தன்னுடைய குற்றங்களையும் தானே காண முடியாது. தன்னுடைய தீய குணங்களையும் குறைபாடுகளையும் நீக்கிக் கொள்வதன் பொருட்டு ஒருவன் குருவின்கீழ் வாழவேண்டும்.

ஆசான் அல்லது குருவின் போதனையின் கீழ் உள்ள சாதகன் நெறி வழுவாமல் பாதுகாப்பாக இருக்கின்றான். உலகியலின் எல்லாத் தீய சக்திகளுக்கும் ஆசைகளுக்கும் எதிரான ஒரு அரணாகவும் ஒரு கவசமாகவும் சத்சங்கம் அல்லது குருவின் கூட்டுறவு அமைகிறது.

குரு வேண்டியதில்லை என்ற கொள்கைக்கு நம்பகமான உதாரணங்களாகக் குருவின் போதனை பெருமலே நிறைநிலை அடைந்தவர்களை எடுத்துக் காட்டுவது பொருந்தாது. ஏனெனில் இத்தகைய பெரியோர்கள் ஆன்மீக வாழ்வின் விதி விலக்குகள்; பொதுவான வழக்கத்துக்கு உரியவர்களல்லர். அவர்கள் தம் முற்பிறவியில் பயின்ற தியானம், ஆராய்ச்சி, கடுமையான பணிகள் ஆகியவற்றின் பயனுக இப்பிறவியில் நிலவ வந்த ஆன்மீக ஆசான்களாவர் அவர்கள் ஏற்கனவே குருவின் கீழ் பயின்றுள்ளனர். இப்பிறப்பு அவர்களின் ஆன்மீக முயற்சியின் தொடர்ச்சியே ஆகும். எனவே, இதனுல் குருவின் முக்கியத்துவம் குறைக்கப்படவில்லை.

சில ஆசான்கள் தங்கள் சாதகர்கட்குத் தவருன வழியைக் காட்டி விடுகின்ருர்கள். ''நீயே சிந்தித்துப்பார்; எந்தக் குருவினிடமும் சரண் புகாதே'' என்று அனைவரிடமும் கூறுகின்றனர். 'எந்தக் குருவையும் பின்பற்ருதே' என்று ஒருவர் கூறும்போது, அதைக் கேட்போரின் குருவாகத் தாமே இருக்க வேண்டுமென்று அவர் விரும்புகின்ருர். இத்தகைய போலி குருக்களை அணுக வேண்டாம். அவர்களின் போதனைகட்கும் செவி சாய்க்க வேண்டாம்.

பெரியோர்கள் அனைவர்க்குமே குருமார்கள் இருந்தனர். எல்லா முனிவர்கள், சாதுக்கள், தீர்க்கதரிசிகள், உலக ஆசான்கள், அவதார மூர்த்திகள், பெரியோர்கள், தாங்கள் எவ்வளவு பெருமை வாய்ந்தவர்களாக இருப்பினும் தங்கள் குருமார்களைப் பின்பற்றினுர்கள். மெய்ஞ் ஞானத்தை ஸ்வேதகேது உத்தாலக முனிவரிடமிருந்தும், மைத்ரேயி யாக்ஞவல்கியரிடமிருந்தும்,

பிருகு வருணனிடத்திலிருந்தும், நாரதர் சனத்குமாரரிடமிருந்தும், நசிகேதஸ் எமனிடத்திலிருந்தும், இந்திரன் பிரஜாபதியிடமிருந்தும் கற்றுக் கொண்டனர். மற்றும் எவ்வளவோ பேர்கள் பணிவுடன் ஞானிகளைச் சென்றடைந்து கடுமையான பிரம்மச்சர்யத்தை மேற்கொண்டு கடினமான கட்டுப்பாடுகளைப் பழகிப் பிரம்ம வித்தையைக் கற்றுக் கொண்டார்கள்.

கிருஷ்ண பகவான் தம் சாந்தீபனி குருவின் காலடியில் அமர்ந்தார். இறைவனாகிய இராமனுக்கு வசிஷ்டகுரு உபதேசம் செய்தார். ஜோர்டான் நதிக்கரையில் ஞான நீராட்டைச் செய்து கொள்ள ஏசுநாதர் யோவானை நாடினார். தேவர்களுக்கும் பிரகஸ்பதி குருவாக இருக்கிறார். தேவர்களில் மிகப் பெருமை வாய்ந்தவர்களும் தக்ஷிணாமூர்த்தி குருவின் காலடியில் அமர்ந்தனர்.

ஆரம்ப சாதகனுக்கு முதலில் மனித குரு ஒருவர் வேண்டும். தொடங்கும் போதே இறைவனைக் குருவாகக் கொள்ள முடியாது. அவன் மனத்தூய்மை பெறவேண்டும்; நல்லொழுக்கத்தில் நிறைநிலை பெறவேண்டும். ஆழ்ந்த நற்பண்புள்ளவனாக இருக்க வேண்டும். உடல்—நினைவுக்கு, வராமல் மேம்பட்டவனாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவன் இறைவனைக் குருவாக அடைய முடியும்.

## குருவைத் தேர்தல்

ஒரு மகாத்மாவின் முன்னிலையில் நீ அமைதி காண்பாயாகில், அவருடைய உரைகளில் நீ உள்ளக் கிளர்ச்சி பெற்றாயாகில், உன் ஐயங்களை அவர் போக்க முடிந்தால், காமம், வெகுளி, பேராசை

களிலிருந்து அவர் விடுபட்டவராக இருந்தால், தன்னலம் அற்றவராகவும் தன் நினைவு அற்றவராகவும், அனைவரையும் நேசிப்பவராகவும் அவர் இருந்தால், அவரை நீ உன் குருவாகக் கொள்ளலாம். உன் ஐயங்களைப் போக்கும் ஆற்றல் வாய்ந்தவர், உன் சாதனையில் இரக்கம் காட்டுபவர், உன் நம்பிக்கைகளைத் தகர்க்காமல், நீ இருக்கும் இடத்திலிருந்து மேலே முன்னேறிச் செல்ல உதவுபவர், தம்முடைய முன்னிலைத் தன்மையாலேயே ஆன்மீக உயர்ச்சி பெறும் உணர்வை நீ அடையச் செய்பவர்- அவர்தான் உன் குரு. குருவென்று தேர்ந்த பிறகு முழுமனதோடு, தடை எதுவும் சொல்லாமல் அவரைப் பின்பற்று. குருவின் வாயிலாக இறைவன் உனக்கு வழி காட்டுவார்.

உன் குருவைத் தேர்வதில் உன் பகுத்தறிவை அளவுக்கு மீறிப் பயன்படுத்தாதே. அப்படிச் செய்தால் நீ தவறிவிடக்கூடும். முதல் தரமான குருவை நீ அடைய முடியவில்லையென்றால், வேதங்களை ஓரளவு அறிந்தவரும், தூய்மை முதலான நற்குணங்கள் வாய்ந்தவரும், ஆன்மீக நெறியில் சில ஆண்டுகள் சென்றவரும் ஆகிய ஒரு சாதுவின் அறிவுரைகளைப் பின்பற்ற முயற்சி செய். எம். ஏ. தகுதி பெற்ற பேராசிரியர் கிடைக்காத பொழுது, கல்லூரி இடைநிலை வகுப்பு மாணவர், எட்டாம் வகுப்பு மாணவனுக்குக் கற்றுத்தரக் கூடியவராக இருப்பது போல், மருத்துவ அதிகாரி இல்லாத பொழுது ஒரு நோயாளியைத் துணை மருத்துவர் கவனிப்பது போல், இரண்டாம் வகையான குரு உனக்கு உதவி செய்ய முடியும்.

இந்த இரண்டாம் வகையான குருவையும் உன்னால் அடைய முடியவில்லையென்றால், ஸ்ரீ சங்கரர், தத்தாத்ரேயர் முதலான மெய்யுணர்வு

பெற்ற முனிவர்களின் நூல்களில் அடங்கியுள்ள போதனைகளை நீ பின்பற்றலாம். முடிந்தால் இத் தகைய மெய்யுணர்வு பெற்ற ஒரு குருவின் புகைப் படத்தை நீ வைத்துக் கொள்ளலாம். அதை நம்பிக்கையுடனும் பக்தியுடனும் நீ வழிபடலாம். நாளடைவில் நீ உள்ளுணர்வு பெறுவாய்; சரியான பக்குவ காலத்தில் உன் கனவில் குரு தோன்றி உனக்குத் தீக்ஷை செய்து உள்ளக் கிளர்ச்சியை ஊட்டுவார். நேர்மையான சாதகனுக்கு மனித சக்திக்குப் புலனாகாத வகையில் உதவி வந்து சேர் கிறது.

## மனித அறிவுக்கெட்டாத இறையுதவி

இறைவன் தன் பக்தர்களுக்கு எப்படி உதவி யுள்ளார் என்பதைப் பின்வரும் உதாரணங்களில் காணலாம். ஏகநாதர் விண்ணில் தோன்றிய குரலான ஓர் ஆகாச வாணியைக் கேட்டார். "தேவகிரியில் உள்ள ஜனார்த்தன பந்த் என்ப வரைப் பார். அவர் உன்னைச் சரியான பாதையில் சேர்த்து வழியும் காட்டுவார்" என்று அது கூறியது. அவர் அதன்படியே நடந்து தம் குருவை அடைந் தார். துகாராம் 'ராமகிருஷ்ண ஹரி' என்ற மந்திரத்தைத் தம் கனவில் பெற்றார். அவர் இந்த மந்திரத்தை ஓதிக் கிருஷ்ண பகவானுடைய தரிச னத்தைப் பெற்றார். மல்லிகார்ஜுனத்தில் உள்ள ஒரு சந்நியாசினிடத்தில் போய் தீக்ஷை பெறுமாறு கிருஷ்ண பகவான் நாம தேவருக்குக் கட்டளை தந்தார். அரசி சூடாலை, கும்ப முனியின் வடிவாய் கொண்டு, காட்டில் இருந்த தன் கணவர் சிகிதித் வஜரின் முன்னால் தோன்றிக் கைவல்ய இரகசியங் களை அறிவித்தாள். மதுரகவி தொடர்ந்து மூன்று நாட்களாக விண்வெளியில் ஓர் ஒளியைக் கண்டார். திருநெல்வேலி அருகில் ஒரு புளிய மரத்தினடியில்

நிட்டை கூடியிருந்த நம்மாழ்வார் ஆகிய அவ்ருடைய குருவினிடம், அவ்வொளி அவரை அழைத்துச் சென்றது. நாட்டியக்காரி சிந்தாமணியினிடத்தில் வில்வமங்களனுக்கு மிகுந்த கவர்ச்சி ஏற்பட்டிருந்தது. அவளே அவரின் குருவானாள். தோன்றாத் துணையாக இருந்த ஒருவரிடமிருந்து, அனுமனைக் காணுமாறு துளசிதாசர் கட்டளை பெற்றார்; அனுமன் வாயிலாக அவர் ஸ்ரீ இராமனுடைய தரிசனம் பெற்றார்.

---

தகுதி வாய்ந்த சீடர்களுக்குத் தகுதி வாய்ந்த குருமார்கள் வாய்க்காமல் போவதில்லை. மெய்யுணர்வு பெற்றோரின் எண்ணிக்கைக்குக் குறைவில்லை. அறிவில்லாத பாமர மக்கள் அவர்களை எளிதில் அறிந்துகொள்ள இயலாது. தூய்மை வாய்ந்து எல்லா நற்குணங்களின் இருப்பிடமாக இருக்கின்ற மிகச்சிலரே மெய்யுணர்வு பெற்றோரைக் கண்டுகொள்ள முடியும்; அவர்களின் கூட்டுறவினால் அவர்கள் பயன் பெறுவார்கள்.

உலகம் உள்ள வரையும், மெய்யுணர்வு பெறுவதன் பொருட்டுச் செல்லும் நெறியில் தத்தளிப்போருக்கு வேதங்களும் குருமார்களும் வழிகாட்டும் வாய்ப்பு இருக்கும். சத்திய யுகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது கலியுகத்தில், மெய்யுணர்வு பெற்றோரின் எண்ணிக்கை குறைவாக இருக்கலாம். ஆனால் சாதகர்களுக்கு உதவி செய்ய அவர்கள் எப்போதும் இருக்கின்றார்கள். தன் வலிமை, இயல்பு, தெளிவு ஆகியவற்றுக்கு ஏற்ப ஒவ்வொரு மனிதனும் தன் தன் பாதையைத் தேர்ந்து கொள்ளலாம். அவ்வழியில் அவனுடைய சத்குரு சந்திப்பார்.

# சிக்ஷை குருமார்களும் தீக்ஷை குருமார்களும்

உலக வாழ்வில் மனிதனுக்கு இருவகைக் கடமைகள் உண்டு. ஒன்று தன் வாழ்வைப் பாதுகாப்பது, இரண்டு தன்னை அறிதல், தன் வாழ்வைப் பாதுகாப்பதன் பொருட்டுத் தன் உணவைத் தேடிக் கொள்ளும் ஒரு தொழிலைக் கற்றுக் கொள்ளுகிறான். தன்னை அறிவதன் பொருட்டுச் சேவை செய்கின்றான்; அனைவரிடமும் அன்பு பாராட்டுகின்றான்; தியானத்தில் மூழ்குகின்றான். உலகியல் கலைகளைப் பற்றிய அறிவை வழங்குபவர் அவனுடைய சிக்ஷை குரு. மெய்யுணர்வு நெறியைக் காட்டுபவர் தீக்ஷை குரு. தான் கற்றுக்கொள்ள விரும்பும் பொருள்களின் எண்ணிக்கை போல் சிக்ஷை குருக்கள் எண்ணற்றோராவார். முக்திக்கு அழைத்துச் செல்லக்கூடிய தீக்ஷை குருவோ ஒருவர்தான் இருக்க முடியும்.

## ஒரு குருவை சிக்கெனப் பிடித்துக் கொள்

மருத்துவர் ஒருவரை நாடினால் நீ சிகிச்சை பெறுகிறாய். இரண்டு மருத்துவர்களை நாடினால் நீ ஆலோசனைக் குழப்பத்தை அடைகிறாய். மூன்று மருத்துவர்களை நாடினால் நீ உன் இறுதியைத் தேடிக் கொள்ளுகிறாய். என்ன செய்வதென்று தெரியாமல் நீ திகைப்பாய். சோஹம் ஜபத்தைச் செய்யுமாறு ஒரு குரு கூறுவார். ஸ்ரீராம ஜபத்தைச் செய்யுமாறு இன்னொருவர் இயம்புவார். அனாகத ஒலிகளை உற்றுக் கேட்குமாறு மூன்றாவது குரு மொழிவார். உனக்குப் பெருந் திகைப்பே ஏற்படும். ஒரு குருவைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டு அவருடைய போதனைகளைத் தவறாமல் கடைப்பிடிப்பாயாக.

அனைவர் சொல்வதையும் கேள்; ஆனால் ஒருவரை மட்டுமே பின்பற்று. அனைவரிடமும் வணக்கத்தைச் செலுத்து; ஆனால் ஒருவரை மட்டும் வழிபடு. அனைவரிடத்திருந்தும் அறிவைத் திரட்டு; ஆனால் ஓர் ஆசானுடைய போதனைகளை மட்டும் கடைப்பிடி. அப்போது வேகம் மிகுந்த ஆன்மீக முன்னேற்றத்தை நீ அடைவாய்.

## குரு பரம்பரை

ஆன்மீக அறிவு குரு பரம்பரைக்கு உரிமையாகும். குருவினிடமிருந்து சீடருக்கு அது கொடுக்கப் படுகிறது. கௌடபாத ஆச்சாரியார் தம் சீடர் கோவிந்த ஆச்சாரியாரிடம் வழங்கினார். கோவிந்த ஆச்சாரியர் தம் சீடர் சங்கராச்சாரியாருக்கும், சங்கராச்சாரியார் தம் சீடர் சுரேஸ்வராச்சாரியாருக்கும் வழங்கினர்.

மத்ஸ்யேந்திர நாதர் தம் சீடர் கோரக் நாதருக்கும், கோரக்நாதர் நிவிருத்தி நாதருக்கும், நிவிருத்தி நாதர் ஞான தேவருக்கும் மெய்யறிவு வழங்கினர். தோதாபுரி தம் சீடர் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும், இராமகிருஷ்ணர் விவேகானந்தருக்கும் மெய்யுணர்வு வழங்கினர். ஜனக ராஜாவின் வாழ்வை உருவாக்கியவர் அஷ்டவக்ரர். பர்த்ருஹரி ராஜாவின் ஆன்மீக இலட்சியத்தை உருவாக்கியவர் கோரக்நாதர். அர்ஜுனனும் உத்தவரும் தத்தம் மனங்கள் ஒருநிலைப்படாமல் குழம்பியபோது கிருஷ்ண பகவான் அவர்கள் ஆன்மீக நெறியில் உறுதி பெறுமாறு செய்தார்.

## தீக்ஷையின் பொருள்

பக்தி நெறியில் ஒரு பக்தனுக்கு ஒரு பக்திமான் தீக்ஷை கொடுக்கலாம். மகா வாக்கியங்களின்

வேதாந்த நெறியில் ஒரு ஞானி தம் சீடனுக்குத் தீக்ஷ தரலாம். ஹட யோகி அல்லது ராஜயோகி தத்தம் நெறியில் மற்றவருக்குத் தீக்ஷ செய்யலாம். ஆனால் பூரண மெய்யுணர்வு பெற்ற ஞானி, பூரண ஞானி அல்லது பூரண யோகி எந்த ஒரு நெறியில் செல்லவும் தீக்ஷ வழங்கலாம். ஸ்ரீ சங்கரர், அல்லது மதுசூதன சரஸ்வதி போன்ற ஒரு சாது அல்லது முனிவர், சாதகன் எந்த நெறியில் செல்லத் தகுதி வாய்ந்தவனே அந்த நெறியில் செல்வதற்குத் தீக்ஷ தரலாம்.

குரு சாதகனை மிகவும் அணுகி நின்று அவனுடைய சுவைகள், இயல்புகள், ஆற்றல் ஆகியவற்றை நன்கு ஆராய்ந்தறிந்து அவனுக்கு மிகவும் தகுந்த நெறியை முடிவு செய்வார். அவன் மனத்தில் மாசு படிந்திருந்தால் தன்னலமற்ற சேவையைப் பல ஆண்டுகட்கு அவன் செய்ய வேண்டும் என்று விதிப்பார். எந்த ஒரு பாதைக்குச் சீடன் தகுதி வாய்ந்தவனாக இருக்கின்றான் என்பதைப் பின்னர் அறிகின்ற குரு அவனுக்கு அந்நெறியில் செல்லத் தீக்ஷ அளிப்பார்.

தீக்ஷ என்பதன் பொருள் ஒருவர் காதில் ஒரு மந்திரத்தை ஓதுதல் அன்று. கிருஷ்ணனைப் பற்றிய எண்ணங்களுக்கு இராமன் வசப்பட்டிருந்தால் கிருஷ்ணனால் இராமனுக்கு ஏற்கனவே தீக்ஷ கிடைத்தாகி விட்டது. ஒரு முனிவர் எழுதிய நூல்களைப் பயின்று மெய் நெறியில் ஒரு சாதகன் நடந்தால், அவருடைய போதனைகளை மனத்துட் கொண்டால், அம்முனிவர் ஏற்கனவே அவனுடைய குரு ஆகிவிட்டார்.

# 14

## சக்தி சஞ்சாரம்

ஒருவனுக்கு நீ ஓர் ஆரஞ்சுப் பழத்தைத் தருவது போல் ஒருவர் ஆன்மீக ஆற்றலையும் மற்றொருவருக்குச் செலுத்த முடியும். ஆன்மீக ஆற்றலைச் செலுத்தும் இம்முறை சக்தி சஞ்சாரம் எனப்படும். சக்தி சஞ்சாரத்தில் சத்குருவின் குறிப்பிட்ட ஓர் ஆன்மீக அதிர்வு சீடனின் மனத்துக்கு உள்ளபடியே மாற்றப்படுகிறது.

சக்தி சஞ்சாரத்துக்குத் தகுதி வாய்ந்தவர் என்று தாம் கருதும் பக்குவம் வாய்ந்த சீடனுக்குக் குருவினால் ஆன்மீக ஆற்றல் செலுத்தப் படுகிறது. குரு சீடனைப் பார்வையினால், தொடுவதனால், எண்ணத்தால், சொல்லால் அல்லது விருப்பத்தினால் மாற்றக் கூடும்.

ஏசுநாதர் தம் சீடர்கள் சிலரைத் தொட்டு அவர்கட்குத் தம் ஆன்மீக ஆற்றலைச் செலுத்தினார். நாட்டியக்காரியின் பெண்ணொருத்தி சமர்த்த ராமதாசரின் சீடரிடம் மிகவும் மோகம் கொண்டிருந்தாள். அவர் அவளுக்குத் தம் ஆற்றலைச் செலுத்தினார். சீடர் அவளை உற்றுப் பார்த்துச் சமாதி பெறச் செய்தார். அவளுடைய மோகம் மறைந்தது. அவள் சமய ஆர்வமும் ஆன்மீக நாட்டமும் கொண்டவள் ஆனாள். சூர்தாஸின் பார்வையற்ற கண்களைக் கிருஷ்ண பகவான் தொட்டார். சூர்தாஸின் அகக்கண் திறந்து கொண்டது. அவர் பாவ சமாதி யடைந்தார். கௌரங்கநாதர் மக்கள் பலரைத் தொட்டுக் கடவுட் பித்தம் கொள்ளச் செய்து தம் பக்கம் அவர்கள் மாறும் படிச் செய்தார். அவரால் தொடப் பெற்ற நாத்திகரும் கூடக் களிப்பு மிகுந்து தெருக்களில் கூத்தாடி ஹரியின் பாடல்களைப் பாடினர்.

குருவினிடமிருந்து செலுத்தப்பெற்ற ஆற்றலைக் கொண்டு சீடன் திருப்தியடைந்து விடக் கூடாது. சாதனையில் மேலும் நிறைநிலை பெறவும் பேறுகள் பெறவும் அவன் கடுமையாக உழைக்க வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் விவேகானந்தரைத் தொட்டார். சுவாமி விவேகானந்தர் அதீத உணர்வாகிய அனுபவத்தைப் பெற்றார். அவ்வாறு தொடப் பெற்ற பின்னரும், நிறை நிலையை அடைவதற்காக அவர் மேலும் ஏழாண்டுகள் கடுமையாக உழைத்தார்.

## தன் முயற்சியும் குருவின் கருணையும்

மெய்யுணர்வு என்பது குருவினால் நிகழ்த்தப்படும் அற்புதம் போல் உன்னை வந்து சேராது. புத்தர் பெருமான், ஏசுநாதர், இராமதீர்த்தர் அனைவரும் சாதனை செய்தோராவர். வைராக்கியத்தையும் பயிற்சியையும் மேன்மேல் வளர்த்துக் கொள்ளுமாறு பகவான் கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஆணையிடுகின்றார். 'இப்போதே முக்தியை அளிக்கிறேன்' என்று அவர் அவனிடம் சொல்லவில்லை. சமாதியும் முக்தியும் பெறுமாறு குரு அருள் செய்வார் என்ற தவறான எண்ணத்தை விட்டு விடுங்கள். முயல்க; தூய்மை பெறுக; தியானம் செய்க; இவற்றின் பயனாக மெய்யுணர்வு பெறுக.

குரு கிருபை-குருவின் கருணை மிகவும் இன்றியமையாதது. எனவே சீடன் சோம்பேறியாக அமர்ந்திருக்க வேண்டும் என்பது அதன் பொருளல்ல. வழுவாத புருஷார்த்தங்களையும் ஆன்மீகப் பயிற்சிகளையும் அவன் செய்தாக வேண்டும். இக்காலத்தில் மக்கள் ஒரு சந்நியாசியின் கமண்டலத்திலிருந்து ஒரு துளி தீர்த்தம் பெற விரும்புகின்றனர்; தூய்மை பெறவும் மெய்யுணர்வு பெறவும்

எவ்வகைச் சாதனையும் செய்ய அவர்கள் தயாராக இல்லை. சமாதி கூடச் செய்யும் ஒரு மந்திர மாத்திரையை விரும்புகின்றனர். இத்தகைய மனப் பிராந்தி உனக்கிருந்தால் உடனே அதைத் தவிர்த்து விடு.

சாஸ்திரங்களும் குருவும் உன் ஐயங்களை அகற்ற முடியும்; உனக்கு வழிகாட்ட முடியும். அபரோக்ஷ அனுபூதி அல்லது நேரடியான உள்ளுணர்வாக அமைந்த ஞானம் உன் சொந்த அனுபவத்தால் மட்டுமே ஏற்படுவதாகும். பசியுள்ளவன் தன் பசி தீர வேண்டுமானால் அவன்தான் தன் உணவை உண்ண வேண்டும். கடுமையான அரிப்பு ஒருவனுக்கு ஏற்பட்டால் அவன்தான் தனக்காகச் சொறிந்துகொள்ள வேண்டும்.

குருவின் நல்லாசிகள் எதையும் நிறைவேற்றும் என்பதில் ஐயமில்லை. அவருடைய நல்லாசிகளை எவ்வாறு பெற முடியும்? குருவைத் திருப்தியடையுமாறு செய்வதனால்தான்! சீடன் குருவினுடைய ஆன்மீகக் கட்டளைகளைத் தடை ஏதும் சொல்லாமல் நிறைவேற்றினால்தான் குரு திருப்தி அடைவார். எனவே குருவின் கட்டளைகளைக் கவனமாகப் பின் பற்று. அவருடைய போதனைகளின்படி நடந்து கொள். அப்போதுதான் அவருடைய நல்லாசிகளைப் பெறும் தகுதி உள்ளவனாக ஆவாய். அதன் பின்னரே அவருடைய நல்லாசிகள் உனக்காக ஏதையும் செய்யும்.

# படலம் இரண்டு

## சீடரின் கடமைகளும் உரிமைகளும்

யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததாகுரௌ
தஸ்யை தே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாஸந்தே மஹாத்மன:

— யாருடைய தெய்வபக்தி பெரியதோ, தெய்வத்தினிடம் கொண்டுள்ளது போன்றே குருவினிடமும் பக்தி கொண்டுள்ளாரோ அத்தகைய உயர் உள்ளம் கொண்டவருக்குப் புனித மறைகளின் பொருள்கள் தாமாகவே தெளிவாக விளங்குகின்றன.

(ஸ்வேதாஸ்வதர உபநிஷதம்)

சீடர் என்பவர் குருவின் கட்டளைகளைச் சொல்லுக்கும் பொருளுக்கும் ஏற்றவாறு பின்பற்றி, ஆன்மீகத் துறையில் வளர்ச்சி பெறுதவர்களிடம் தம் குருவின் போதனைகளைத் தம் காலம் முடியும் வரை பரப்பிக்கொண்டே இருப்பவர்.

உண்மையான சீடர், குருவின் தெய்வீக இயல்பைப்பற்றி மட்டுமே கவலைப்படவேண்டும். மனிதன் என்ற முறையில் குரு செய்யும் செயலைப் பற்றிச் சீடன் கவலைப்படவேண்டியதில்லை. அவன் அதைப்பற்றி முற்றிலும் மறதியாக இருப்பான். அவர் மரபு பிறழ்ந்த செயலைச் செய்தாலும், அவனைப் பொறுத்தவரைக்கும், குரு, குருதான். ஒரு ஞானியின் இயல்பு, ஆழங் காணமுடியாதது என்பதை எப்போதும் நினைவில் வைத்துக்கொள். அவரை எடைபோட வேண்டாம். அவருடைய தெய்வீக இயல்பைப், போதிய நீளமில்லாத, உன் அறியாமை என்ற அளவுகோலால் அளக்காதே. அகில உலகக் கண்ணோட்டத்தில் செய்யப்படும் அவரது செயலைக் குறை கூறாதே.

உண்மையான சீடத்துவம் கண்ணைத் திறக்கிறது. ஆன்மீக ஒளியை அது தூண்டிவிடுகிறது. உறங்கிக் கிடந்த மனே சக்திகளை விழித்துக் கொள்ளச் செய்கிறது. ஆன்மீக நெறியில் செல்லும் பயணத்தில் இது மிகவும் இன்றியமையாததாகும். குருவும் சீடரும் ஒருவராகின்றனர். குரு சீடனுக்கு நல்லாசிகளை வழங்கி, வழிகாட்டி கிளர்ச்சியூட்டுகிறார். அவர் அவனிடம் ஆன்மீக ஒளியைச் செலுத்துகிறார். ஆன்மீக ஒளியுள்ளவனாக மாற்றுகின்றார்; ஆன்மீக ஒளிமயமாக உருவாக்குகின்றார்.

## குருவை அணுகும் தகுதி

ஒரு குருவை நீ அணுக வேண்டுமானல் அதற்குத் தகுதிவாய்ந்த அதிகாரியாக நீ இருக்க வேண்டும். சரியாகப் புரிந்துகொள்ளுதல், உலகியல் பொருள்களில் பற்றின்மை, மன அமைதி, புலன்களின் கட்டுப்பாடு, கீழ்த்தரமான ஆசைகள் தோன்றாமை, குருவினிடம் நம்பிக்கை, தெய்வ பக்தி ஆகிய இன்றியமையாத சாதனங்களுடன் சாதகன் குருவை அணுக வேண்டும்.

பிறவிப் பிணியிலிருந்து விடுபடும் வேட்கை, அருள் நூல்களின் கட்டளைகட்கு முறையாகப் பணிந்து செல்வது, ஆசைகளையும் புலன்களையும் அடக்கியிருத்தல், மன அமைதி, கருணை, அகிலத்தையும் நேசித்தல், பொறுமை, பணிவு, சகிப்புத் தன்மை, தன்னலம் மறுத்தல் முதலிய நற்குணங்களின் உறைவிடமாக இருக்கும் சாதகனுக்கு மட்டுமே குரு ஆன்மீக அறிவுரைகளை வழங்குவார். சீடனுடைய மனம் பற்றற்ற தன்மையை அடையும் போதுதான் பிரம்ம இரகசியங்களைப்பற்றிய ஞான தீக்ஷை பலனைத்தந்து ஞானத்தை உண்டாக்கும்.

19

## குரு சேவை

சாதகர்கள் தொடக்கத்தில் முழு கவனத்தைச் செலுத்தவேண்டிய கடமை, நீண்டகால குரு சேவையால் தன்னலத்தை நீக்கிக் கொள்வதாகும். குருவை இறைவனாகப் பாவித்துச் சேவை செய்க. தான் என்ற அகந்தை அதனால் கரைந்துபோகும்.

கப்பல் தலைவன் எப்போதும் விழிப்புடன் இருக்கின்றான். செம்படவன் எந்நேரமும் விழிப்புடன் இருக்கின்றான். அறுவை சிகிச்சை நடைபெறும் இடத்தில் மருத்துவர் கணந்தோறும் விழிப்புடன் இருக்கின்றார். அதுபோலவே பசியுள்ள, தாகமுள்ள சீடன் குருசேவையில் எப்போதும் விழிப்புடன் இருக்கவேண்டும்.

குருவுக்குச் சேவை செய்வதற்காகவே வாழ். சந்தர்ப்பங்களுக்காக நீ காத்திருக்கவேண்டும். அழைப்பு வரட்டும் என்று காத்திராதே. குருசேவையில் நீ தானாகவே ஈடுபடு.

பணிவோடும், விருப்பத்தோடும், சந்தேகப்படாமலும், கர்வம் கொள்ளாமலும், முழுமனதோடும், தளராமலும், அன்போடும் குருவுக்குப் பணிவிடை செய். குருசேவையில் எந்த அளவுக்குச் சக்தியைச் செலவிடுகின்றாயோ அந்த அளவுக்குத் தெய்வீக சக்தி உன்னுள் பாயும்.

குருவுக்குச் சேவை செய்பவன் அகில உலகத்துக்கே சேவை செய்பவனாகின்றான். தன்னல நோக்கங்களின்றிக் குருசேவை செய். குருவுக்குச் சேவை செய்கையில் உன் உள் நோக்கங்களை ஆழ்ந்து பரிசோதித்துப் பார். பேர், புகழ், ஆற்றல், செல்வம் முதலிய எதையும் எதிர்பாராமல் குருசேவை செய்யப்படவேண்டும்.

## குருவினிடம் கீழ்ப்படிதல்

குருவை வணங்குவதைக்காட்டிலும் நல்லது அவருக்குக் கீழ்ப்படிதல். கீழ்ப்படிதல் என்பது பெருமைவாய்ந்த குணமாகும். ஏனெனில் நீ கீழ்ப் படிதலாகிய குணத்தை வளர்க்கத் தொடங்கினுல் மெய்யுணர்வுப் பாதையில் குறுக்கிடும் முக்கியப் பகைவனுகிய 'தான்' என்ற அகந்தை மெதுவாக வேருடன் கிள்ளி எறியப்படுகிறது.

குருவுக்குக் கீழ்ப்படியும் சீடன் தான் தன் கீழ்த்தரமான இயல்பை வெற்றிகொள்ள முடியும். கீழ்ப்படிதல் நேரே நடைமுறையில் நடப்பதாகவும், முழுமனதோடும் சுறுசுறுப்புடன் இடையருது நடைபெறுவதாகவும் இருத்தல் வேண்டும். கபட முள்ள சீடன் அச்சத்தினுல் குருவுக்குக் கீழ்ப்படி கின்ருன். உண்மையான சீடன் அன்புக்காகவே, தூய அன்பினுல் குருவுக்குக் கீழ்ப்படிகின்ருன்.

எப்படிக் கீழ்ப்படியவேண்டும் என்பதைக் கற்றுக்கொள். அப்போதுதான் நீ கட்டளையிடும் தகுதியைப் பெறுகின்ருய். சீடனுக இருக்கக் கற்றுக் கொள். அப்போதுதான் நீ குருவாக இருக்கும் தகுதியைப் பெறுகின்ருய்.

குருவினிடம் பணிவது, கீழ்ப்படிவது, அவருடைய கட்டளைகளை நிறைவேற்றுவது — இவை யெல்லாம் அடிமை மனப்பான்மை என்ற தவருன எண்ணத்தை விட்டுவிடு. இன்னொரு மனிதனின் கட்டளைக்குப் பணிவது தன் சுதந்திரத்திற்கு விரோதம் என்றும் தன் கௌரவத்துக்குக் குறைவு என்றும் அறிவில்லாதவன் கருதுகின்ருன். இது மிகப்பெரிய தவருகும். நீ ஆழ்ந்து சிந்தித்தால் உன் தனிப்பட்ட சுதந்திரம், உண்மையில், உன்

சொந்த அகந்தைக்கும் டாம்பீகத்துக்கும் முற்றிலும் தாழ்ந்து அடிமைத்தனம் பட்டிருப்பதை உணர்வாய். புலன்களில் நாட்டமுள்ள மனத்தின் தடுமாற்றமே அது. அகந்தையையும் மனத்தையும் வெற்றிகொள்பவனே உண்மையான சுதந்திர முள்ள மனிதன். அவனே வீரன். இத்தகைய வெற்றியை அடைவற்காகவே, ஒருவன், மேலான ஆன்மீக அருளாற்றல் வாய்ந்த குருவினிடம் அடைக்கல மடைகின்முன். இத்தகைய அடைக் கலத்தால் அவன் தன் கீழான அகந்தையை வெற்றி கொள்கின்முன். பின்னர் முடிவில்லாத உள்ளுணர் வாகிய பேரின்பத்தை உணர்கின்முன்.

## மனம்போன போக்கில் மகிழ்ச்சி தேடும் சீடர்கள்

ஆராய்ச்சிப்பட்டம் பெறுவதற்காக எழுதப் படும் கட்டுரை போன்றதன்று ஆன்மீகப் பாதை. அது முற்றிலும் கடினமான பாதையாகும். ஒவ்வொரு கணமும் குருவின் துணை இன்றியமை யாதது. இக்காலத்தில் சாதகர்கள் தம் தேவை களைத் தாமே நிறைவுசெய்து கொள்ளவும், தம் உரிமைகளை நிலைநாட்டவும் ஆணவம் கொள்ளவும் தொடங்குகிமுர்கள். குருவின் ஆணைகளை நிறைவேற்றுவது பற்றி அவர்கள் கவலைப்படுவ தில்லை. ஒரு குருவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அவர்கள் விரும்புவதில்லை. தொடக்கத் திலிருந்தே சுயேச்சையாக இருக்க வேண்டுமென்று விரும்புகின்றனர். ஆன்மீகத்தின் அல்லது மெய் யறிவின் அ, ஆ கூடத் தெரியாத நிலையில் அவர்கள் தாம் துரிய அவஸ்தையை அடைந்து விட்டதாக எண்ணிக் கொள்ளுகின்றனர். கட்டுப்பாடின்றி இருத்தல் அல்லது மனம்போன போக்கில் இனிய

விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்வதையே சுதந்திரம் என்று கருதுகின்றனர். இது மிகவும் ஆழ்ந்த பரிதாபகரமான தவறாகும். அவர்கள் வளர்ச்சி பெறாமைக்கு இதுவே காரணம். தெய்வம் உண்டு என்பதிலும் சாதனையின் சக்தியிலும் உள்ள நம்பிக்கையை அவர்கள் இழந்து விடுகின்றனர். குறிக்கோள் எதுவும் இல்லாமல் மனம் போன போக்கில் அவர்கள் திரிகின்றார்கள். காஷ்மீரத்திலிருந்து கங்கோத்திரிக்கும், கங்கோத்திரியிலிருந்து இராமேஸ்வரத்துக்கும் செல்லுகிறார்கள்; ஜீவன் முக்தர்களைப் போல் போலியாக நடித்துக் கொண்டு பஞ்சதசியிலிருந்து சிலவும், விசார சாகரத்திலிருந்து சிலவும், வழிச் செலவின் போது, அர்த்தமற்ற முறையில் பிதற்றிச் செல்கிறார்கள்.

## சரணாகதியும் குருவின் கருணையும்

குழாயில் தண்ணீர் குடிக்க விரும்பினால் நீ குனிந்துதான் ஆகவேண்டும். அதுபோலவே குருவின் புனித வாய்மலரிலிருந்து பாயும், அமரத்துவம் தரும் ஆன்மீக அமுத தாரையைப் பருக நீ விரும்பினால் சாதுவான தன்மையும் பணிவும் கொண்ட வடிவமாக நீ விளங்க வேண்டும்.

மனத்தின் கீழான இயல்பை முற்றிலும் திருத்தியமைக்க வேண்டும். சாதகன் குருவினிடம், ''நான் யோகம் பயில விரும்புகிறேன். நிர்விகல்ப சமாதியடைய விரும்புகிறேன். நான் தங்களிடம் சரணடைந்திருக்கிறேன். தங்கள் காலடியில் அமர நான் விரும்புகிறேன்,'' என்று கூறுகிறான். ஆனால் தன்னுடைய கீழான இயல்பையும், பழக்கங்களையும், பழைய நடத்தையையும், குணத்தையும், ஒழுக்கத்தையும் மாற்றிக்கொள்ள விரும்புவதில்லை.

ஒரு மனிதன் தான் என்ற அகந்தை முன் கூட்டியே கொள்ளும் நோக்கங்கள், விருப்பு வெறுப்புக்கள், தன்னலம் மிகுந்த அக்கறைகள் ஆகியவற்றை அறவே தவிர்க்க வேண்டும். குருவின் சோதனைகளையும் கட்டளைகளையும் நிறைவேற்றுவதற்கு இவையெல்லாம் குறுக்கே நிற்கின்றன.

உன் உள்ளத்தில் உள்ள இரகசியங்களையெல்லாம் உன் குருவினிடம் வெட்டவெளியாக்கு. எந்த அளவுக்கு இதைச் செய்கின்றாயோ அந்த அளவுக்குக் குருவின் இரக்கமும் பெரிதாகும். அது பாவங்களையும், ஆசை மூட்டும் மயக்கங்களையும் வெற்றி கொள்ள நீ எதிர்த்துப் போராடும் போராட்டத்தில் உன் வலிமைக்கு மேலும் வலிவைச் சேர்ப்பதாகும்.

சாதகன் குருவின் கருணையை அடைய விரும்புவதற்கு முன் அதற்கேற்ற தகுதியைப் பெற வேண்டும். தெய்வீகக் கருணையைப் பெறவேண்டும் என்ற உண்மையான தாகம் சாதகன் உள்ளத்தில் தோன்றும் போது, அதைப் பெறும் தகுதியுள்ளவனாக அவன் இருக்கும் போது, அத் தெய்வீகக் கருணை வழங்கப்படுகிறது.

குருவினிடம் முற்றிலும் பணிவும் நம்பிக்கையும் உள்ளவருக்கு அவருடைய கருணை வாய்க்கின்றது. நம்பிக்கை என்பது குருவினிடம் உறுதியும், நம்பும் தன்மையும் உடையவராக இருப்பதேயாகும். நம்புதல் என்பது குரு சொல்லும் வார்த்தையில் அசைக்க முடியாத நம்பிக்கை கொள்வதாகும். அவர் சொல்வது வேறு எவ்வகைச் சாட்சியோ நிரூபணமோ வேண்டப்படாமல் அவர் சொல்லே சாட்சியாகவும் அதிகார பூர்வமாகவும் இருக்கலாம். குருவினிடம் நம்பிக்கை கொண்டுள்ள

சீடன் குரு சொல்வதைப் பற்றித் தர்க்கம் செய்வ தில்லை; சிந்தித்துப் பார்ப்பதில்லை; பகுத்தறிவால் ஆராய்வதில்லை; ஆழ்ந்து ஆலோசனை செய்வது மில்லை. கபடமின்றி அவன் வெறுமனே கீழ்ப் படிகின்றான், கீழ்படிகின்றான், கீழ்ப்படிகின்றான்.

குருவினிடம் சீடன் தானாகச் சரண் புகுவதும் குருவின் கருணையும் ஒன்றுடனொன்று தொடர்புள்ள வையாகும். சரணாகதி குருவின் கருணையை வர வழைக்கிறது; குருவின் கருணை சரணாகதியை நிறைவு செய்கிறது. குருவின் கருணை சாதகனிடத் தில் சாதனை வடிவில் வேலை செய்கிறது. சாதகன் பாதையை இறுகப் பற்றிக் கொண்டால் அது குரு வின் கருணை. மோகம் அவனைத் தீவிரமாகத் தாக்கும்போது அவன் எதிர்த்து நின்றால் அது குருவின் கருணை. மக்கள் அவனை அன்போடும் வணக்கத்தோடும் வரவேற்றால் அது குருவின் கருணை. உடல் தேவைக்குரிய அனைத்தையும் அவன் பெற்றால் அது குருவின் கருணை. துயர் மிகுந்த போதும், மனச்சோர்வு மிகுந்த போதும் அவன் ஊக்கமும் வலிவும் பெற்றால் அது குருவின் கருணை. உடலே தான் என்ற எண்ணத்தைக் கடந்து அவன் தனக்குரிய ஆனந்த சொரூபத்தில் லயித்து நின்றால் அது குருவின் கருணை. ஒவ்வொரு படியிலும் அவ ருடைய கருணையை உணர்; அவரிடம் நேர்மை யாகவும் உண்மையாகவும் இரு.

## குரு போதிக்கும் முறை

குரு தாம் நடந்து காட்டுவதன் மூலம் தம்மையே உதாரணமாகக் காட்டிக் கற்பிக்கின்றார். ஆர்வத்துடன் பின்பற்றும் சீடனுக்குக் குருவின் அன்றாட நடத்தையே உயிர் வாழும் இலட்சியமாக விளங்குகிறது. நேர்மையான சீடனுக்குக் குருவின்

வாழ்க்கையே உயிர்ப்புள்ள நீதி போதனையாகும். இடையருத தொடர்பினுல் சீடன் குருவின் நற் குணங்களைக் கிரகித்து அவற்றின் மயமாகிருன். அவன் மெதுவாக உருவாக்கப் படுகிருன். சாந் தோக்கிய உபநிஷத்தைப் படி. இந்திரன் பிரஜா பதியினிடம் நூற்றியோராண்டுகள் தங்கியிருந்து முழு மனதோடு பணிவிடை செய்தான் என்பதை நீ அறிந்து கொள்வாய்.

குரு தம் சீடர்களின் ஆன்மீகத் தேவைகளை மட்டும் அறிகின்ருர். சீடனுடைய மனோ பாவத் துக்கும் வளர்ச்சிக்கும் ஏற்றவாறு குரு உபதேசம் செய்வார். உபதேசம் இரகசியமாக காப்பாற்றப் படவேண்டும். சீடர்களுக்கிடையே தோன்றும் வாக்குவாதம் குருவைக் குறை கூறுவதிலும், சாதனையில் தளர்ச்சியடைவதிலும் கொண்டு போய் விடும். ஆன்மீக முன்னேற்றம் ஏற்படாது. குரு வின் உபதேசத்தை எழுத்துக்கு எழுத்து அப்படியே பின்பற்று. அது உனக்காக மட்டுமே உள்ளது என் பதை நினைவில் கொள். ஏனைய சீடர்களும் குருவின் உபதேசத்தைப் பெற்றுள்ளனர். நீ பெற்ற உபதேசத்தை மற்றவர்களின் மீது திணிக்காதே.

## குருவின் சோதனைகள்

சத்குரு தம்முடைய நம்பிக்கைக்குரிய சீடர்கள் பல்கால் பணிவுடன் வேண்டிய பின்னரும், தாம் அவர்களைக் கடுமையான சோதனைகளுக்கு உட்படுத் திய பின்னருமே, உபநிஷதங்களின் இரகசியப் பொருளை அறிவுறுத்துகின்ருர். சில சமயங்களில் குரு தம் சீடனை மயங்குமாறும் செய்யலாம்; ஆனுல் சீடன் தன் குருவினிடம் கொண்டுள்ள உறுதியான நம்பிக்கையால் வெற்றி பெற வேண்டும்.

பழங்காலத்தில் சோதனைகள் மிகவும் கடுமையாக இருந்தன. ஒரு முறை கோரக்நாதர் தம் சீடர்கள் சிலரை உயரமான மரத்தின் மேல் ஏறித் தரையில் நட்டு வைக்கப்பட்டிருந்த திரிசூலத்தின் மீது தலை கீழாக விழச் சொன்னார். நம்பிக்கையற்ற பல சீடர்கள் வாளா இருந்தனர். ஆனால் நம்பிக்கை மிகுந்த சீடன் ஒருவன் உடனே மரத்தின் மீது ஏறி மின்னல் வேகத்தில் தலைகீழாக விழுந்தான். கோரக்நாதரின் கை பிறர் கண்ணுக்குத் தெரியாமல் அவனைக் காப்பாற்றியது. அவன் உடனே மெய்யறிவு பெற்றான்.

ஒருமுறை குரு கோவிந்தசிங் தம் சீடர்களைப் பரிசோதனை செய்தார். ''என் அருமைச் சீடர்காள்! என்னிடம் உங்களுக்கு உண்மையான பக்தி இருக்குமாயின் உங்களில் அறுவர் முன்வந்து தங்கள் தலைகளைத் தாருங்கள். பின்னர் நம் முயற்சியில் நமக்கு வெற்றி கிட்டும்,'' என்று அவர் கூறினார். நம்பிக்கை மிகுந்த சீடர்கள் இருவர் தங்கள் தலைகளைத் தர முன்வந்தனர். குரு கோவிந்த சிங் அவர்களைப் பாசறையின் உள்ளே அழைத்துச் சென்றார்; அவர்களுக்குப் பதிலாக இரண்டு ஆடுகளின் தலைகளை வெட்டித் தள்ளினார்.

பல்வேறு வழிகளில் குரு தம் சீடர்களைப் பரிசோதனை செய்கிறார். சீடர் சிலர் அவரைத் தவறாகப் புரிந்து கொண்டு அவரிடம் தாம் கொண்டிருந்த நம்பிக்கையை இழக்கின்றனர். எனவே அவர்கள் பயன் பெறுவதில்லை.

## நால்வகைச் சீடர்கள்

முதல்தரமான சீடன் பெட்ரோல் அல்லது விமான எண்ணெய் போன்றவன். குருவினிட மிருந்து நீண்ட தூரத்தில் இருந்தால்கூட அவருடைய உபதேசம் என்னும் தீப்பொறியால் உடனுக்குடனே அவன் பற்றப்படுகிறான்.

இரண்டாம்வகைச் சீடன் கற்பூரத்தைப் போன்றவன். தொட்டதும் அவன் உள்ளுணர்வு விழித்தெழுந்து அவனுக்குள் இருக்கும் ஆன்மீக ஒளியைத் தூண்டிச் சுடர்விடச் செய்கிறது.

மூன்றும்வகைச் சீடன் கரியைப் போன்றவன். அவனுள் இருக்கும் ஆன்மீகம் விழித்தெழுவதற்கு அவர் மிகப்பெரு முயற்சிகளை மேற்கொள்ளுகின்றார்.

நான்காம்வகைச் சீடன் வாழைத்தண்டு போன்றவன். எத்தகைய முயற்சிகளும் அவனிடம் ஒரு பயனையும் விளைவிக்காது. குரு என்னதான் செய்தாலும் அவன் சிரத்தையற்று ஜடமாகவே இருப்பான்.

அழகாக முடிக்கப்படும் சிலை அல்லது வடிவத்திற்கு இரண்டு பொருள்கள் இன்றியமையாதவை. ஒன்று, களங்கமில்லாத நிறைநிலைவாய்ந்த நல்ல சலவைக்கல்; இரண்டு, தேர்ச்சிபெற்ற சிற்பி. சலவைக்கல் துண்டு நிபந்தனையற்றுச் சிற்பியின் கையில் இருக்கவேண்டும். அப்போதுதான் சிற்பி வடிவம் அமைத்து அழகிய சிலையாகச் செதுக்க முடியும். அதுபோலவே சீடன் தன்னைத் தூய்மைப் படுத்திக்கொண்டு நிறைநிலைவாய்ந்த பழுதற்ற சலவைக்கல்லாகத் தன்னை அமைத்து, நெறிப் படுத்தும் தேர்ச்சிபெற்ற குருவின்கீழ் தன்னை ஒப்படைத்துத் தன்னைத் தெய்வ வடிவமாகத் திட்ட மிட்டுச் செதுக்க அவரை அனுமதிக்க வேண்டும்.

# படலம் மூன்று

## புனிதம்மிகுந்த குரு — பௌர்ணமி நாளின் உட்பொருள்

சங்கரம் சங்கராச்சார்யம் கேசவம் பாதராயணம்
ஸூத்ர பாஷ்ய க்ரிதௌ வந்தே பகவந்தௌ
புன: புன:

— சிவபெருமான், விஷ்ணு, பகவான் வியாசர், ஸ்ரீ சங்கராச்சாரியார் ஆகியோரை வணங்குகின்றேன். வேதாந்த சூத்திரங்களை எழுதிய ஸ்ரீ வியாசரையும், அவற்றுக்கு உரை விளக்கங்களை வழங்கிய ஸ்ரீ சங்கராச்சாரியாரையும், மீண்டும் மீண்டும் வழுத்துகின்றேன்.

— குருவந்தனம்.

ஆடிமாதத்தில் வரும் நிறைநிலவு நாள் மங்கலம் மிகுந்த, புனிதம் நிறைந்த குரு—பௌர்ணமி நாளாகும். இந்த ஆடிப் பௌர்ணமி நாளன்று ஸ்ரீ வியாச பகவான் அல்லது ஸ்ரீ கிருஷ்ண துவைபாயனரை நினைவு கூர்வதற்குப் புனிதம் மிகுந்த இவ்வேளையில் சந்நியாசிகள் ஓரிடத்தி லமர்ந்து பயில்கின்றனர்; வேதாந்த ஆராய்ச்சி செய்கின்றனர்; மும்மடங்கு மகிழ்ச்சிதரும் மகரிஷி வியாசரின் பிரம்ம சூத்திரங்களைப்பற்றிக் கலந்துரையாடுகின்றனர். ஸ்ரீ வேத வியாசர் நான்கு வேதங்களை வகுத்துப் பதினெண் புராணங் களையும், மகாபாரதத்தையும், பாகவதத்தையும் எழுதி, எக்காலமும் வாழும் எல்லா மனித இனத் துக்கும் மறக்கமுடியாத சேவை செய்துள்ளார். இக்கலியுகத்தில் அவருக்கு நாம் கடமைப்பட்டுள்ள ஆழ்ந்த நன்றிக் கடனைச் செலுத்தக்கூடிய வழி, தொடர்ந்து அவருடைய நூல்களைப் பயில்வதும், மக்களின் மறுமலர்ச்சிக்கென அவர் வழங்கியுள்ள

போதனைகளைப் பின்பற்றுவதும் மட்டுமேயாகும். இத்தகைய தெய்வீகத் தன்மைவாய்ந்த மகானைப் பெருமைப்படுத்தும் வகையில் சாதகர்கள், பக்தர்கள் அனைவரும் இன்று வியாச பூஜை செய்கின்றனர். சீடர்கள் தம் குருவைத் தொழுகின்றனர். மகாத்மாக்களும் சாதுக்களும் இல்வாழ்வோரால் வரவேற்கப்பட்டு, மகிழ்வுறுத்தப்பட்டு, ஆழ்ந்த நம்பிக்கையுடனும் நேர்மையுடனும் தானதர்மங்கள் செய்யப்படுகின்றன. சந்நியாசிகளுக்குரிய சாதுர் மாத (நான்கு மாத) விரதம் இன்று தொடங்குகிறது. மழைக்காலமாகிய நான்கு மாதங்களும் சந்நியாசிகள் ஓரிடத்தில் தங்கியிருந்து பிரம்ம சூத்திரங்களைப் பயில்கின்றனர்; பின்பற்றுகின்றனர்; தியானம் செய்கின்றனர்.

## குரு – பௌர்ணமி நாளின் உட்கருத்து

இப்பெருநாளின் உட்கருத்து முழுவதையும் கவனி. ஆடிப் பௌர்ணமி, அடுத்துவரும் சாதுர் மாதங்களின் வருகையை அல்லது அனைவரும் ஆவலுடன் எதிர்பார்க்கும் மழைக்காலத் தொடக்கத்தை முன் அறிவிக்கின்றது. வெம்மைமிகுந்த கோடையில் மேகங்களால் உட்கொள்ளப்பட்டுத் தேக்கிவைக்கப்பட்ட தண்ணீர் இப்போது அளவு கடந்த பெருமழையாகக் காட்சியளிக்கின்றது; எங்கும் புதுவாழ்க்கையின் தொடக்கத்தை அம்மழை முன்கூட்டித் தெரிவிக்கின்றது. அதுபோலவே இதுகாறும் நீங்கள் அமைதியாகப் பயின்று சேகரித்த கொள்கைகளையும் தத்துவங்களையும் நடைமுறை வாழ்வில் பின்பற்றத் தீவிரமாக நீங்கள் அனைவரும் முற்படுகிறீர்கள். சரியாக இன்றுமுதல் நடைமுறை ஆன்மீகச் சாதனையைத் தொடங்குக. ஆன்மீகப் புதிய அலைகளைத் தோற்றுவிப்பீராக. இதுகாறும் நீங்கள் படித்தும், கேட்டும், பார்த்தும்

கற்ற அனைத்தும் சாதனை வாயிலாகத் தொடர்ந்து பொங்கும் அகில உலக அன்பாகவும், முடிவில்லாத அன்புச் சேவையாகவும், எல்லா உயிர்களிடமும் குடிகொண்டுள்ள இறைவனை இடையறாது வணங்கும் வணக்கமாகவும் வழிபாடாகவும் உருப் பெறுவதாக.

அன்று பழங்களையும் பாலையும் மட்டும் உணவாகக் கொள்ளுக; கடுமையான ஜெபமும் தியானமும் செய்க. சாதுர் மாச நாட்களில் பிரம்ம சூத்திரங்களைப் பயில்க; இஷ்டமந்திரம் அல்லது குருமந்திரத்தைச் சில இலட்சம் தடவை ஜெபம் (அனுஷ்டானம் அல்லது புரஸ் சரணம்) செய்க. நீவிர் வெகுநலம் பெறுவீர்.

குருபூஜை நாள் அல்லது ஒருவர் குருவுக்குச் செய்யும் வழிபாட்டு நாள் என்ற வகையில் இந்நாள் நேர்மையான சாதகனுக்கு மாசு மறுவற்ற மகிழ்ச்சி மிகும் நாளாகும். பணிவுமிகுந்த வணக்கத்தை அன்பான குருவுக்கு வழங்குவதை எதிர்பார்த்துக் கிளர்ச்சியடையும் சாதகன் இந்த நேரத்துக்காக மிகுந்த ஆர்வத்தோடும் பக்தியோடும் காத்திருக் கின்றான். குரு தன் சாதகனைப் பாசமாகப் பிணித் துள்ள கட்டுக்களை உடைத்தெறிந்து உலகியல் இடையூறுகளிலிருந்து அவனை விடுவிக்கின்றார். ''தெய்வபக்தி மிகுந்து விளங்குவதைபோலவே குருவினிடம் பக்திமிகுந்த, அந்த உயர் உள்ளம் வாய்ந்த சாதகனுக்கு இந்த இரகசியங்கள் தாமாகப் புரிகின்றன; தெளிவாக விளங்குகின்றன,'' என்று சுருதி செப்புகிறது. குருபிரம்மமே அல்லது ஈசுவரனே. உன் உள்ளத்தின் ஆழ்ந்தமையத்தில் இருந்துகொண்டு உனக்குக் கிளர்ச்சியூட்டி நெறிப் படுத்தி அவர் வழிகாட்டுகின்றார். அவர் எங்கும் நிறைந்துள்ளார்.

## அகிலத்தையும் குரு உருவமாகக் காண்

புதிய கோணத்தில் பார்வையைச் செலுத்து. அனைத்துலகையும் குரு உருவமாகக் காண்பாயாக. குருவின் வழிகாட்டும் கை, விழிப்பூட்டும் குரல், அவருடைய கைபட்டுத் தெளிவாக விளங்குதல் ஆகியவற்றை இந்தப் படைப்பில் உள்ள ஒவ்வொரு பொருளிலும் காண்பாயாக. மாற்றிக்கொண்ட இந்த உன் பார்வையில் முழு உலகும் மாறுதல் பெற்று நிற்கும் குருவின் விராட உருவம் வாழ்வின் இரகசியங்களை வெளிப்படுத்தி ஞானத்தை நல்கும். கண்ணுக்குத் தெரியும் இயற்கையில் விளங்கும் மேலான பரமகுரு, வாழ்வின் மிகவும் முக்கிய மான பாடங்களைக் கற்றுத்தருவார். அவதூதர் தத்தாத்ரேயருக்கும் கற்பித்த குருவாகிய, குருமார் களுக்கெல்லாம் மேலாகிய இந்தக் குருவை நாள் தோறும் வழிபடுவாயாக. மேலாம் பண்பாகிய மன்னித்தலுடன், மௌனமாக எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டிருக்கின்ற நிலம், விருப்பத் துடன் தன்னையே தியாகம் செய்து நிழலும் கனியும் தருகின்ற மரம், நுண்ணிய விதையினுள் அமைதி யாகக் குடிகொண்டுள்ள வலிமைமிகுந்த ஆலமரம், பாறைகளைப் பிளக்கின்ற வகையில் இடையறுது விழும் மழைத்துளிகள், ஒழுங்காகக் காலந் தவருமல் இயங்கும் கோள்களும் பருவங்களும், ஆகியவைகள் காணவல்லார்க்கும், கேட்கவல்லார்க் கும், பெறவல்லார்க்கும் தெய்வீகக் குருமார்கள் ஆகும்.

## தூய்மை பெறுக; முன்னேறுக

அறிவு எங்கிருந்தாலும் அதை வாங்கிக் கொள்ளும் ஆற்றலைப் பெறுக. தாழ்ந்த அகந்தை உணர்வை அறவே அகற்றுக. இயற்கையின் மடியில்

பூட்டப்பட்டுக் கிடக்கும் எல்லாச் செல்வங்களும் உன்னுடையவையாக ஆகும். வியக்கத்தக்க முறையில் மிகவும் குறுகிய காலத்தில் நீ முன்னேற்றமும் நிறைநிலையும் பெறுவாய். ஆறு தொடர்ச்சியாகவும், உறுதியாகவும், எந்நேரமும், தன் குறிக்கோளாகிய கடலை நோக்கிச் செல்வதுபோல மேலாம் பரநிலையாகிய சச்சிதானந்தத்தை நோக்கி உன் வாழ்வின் ஒவ்வொரு கணமும் செல்க; உன் எண்ணங்களனைத்தும், பேச்சனைத்தும், செயலனைத்தும் அந்தக் குறிக்கோளை நோக்கியே அமைவதாக.

கதிரவனுடைய சுடரொளியை எதிரேற்றுச் சந்திரன் ஒளி தருகின்றான். பௌர்ணமி நாளின் முழு நிலவு, பெருமை மிகுந்த் கதிரவன் ஒளியை முழு அளவில் ஏற்று ஒளி தருகிறது. அது கதிரவனைப் பெருமைப் படுத்துகிறது. முழு நிலவைப்போல், சாதனை, சேவை என்ற நெருப்பினால் உன்னைத் தூய்மைப் படுத்திக்கொண்டு, ஆத்மாவின் பெருமை மிகுந்த ஒளியை எதிரேற்றுப் பொலிவுடன் விளங்குவாயாக. ஒளிகட்கெல்லாம் ஒளியாகிய பிரம்ம ஒளியை முழு அளவில் ஏற்று ஒளி தருபவராகுக. உயிர்வாழும் சான்றாகத் திகழும் இதையே உன் இலட்சியமாகக் கொள்ளுக.

## தத் துவம் அசி

பிரம்மம் அல்லது பரம்பொருள்தான் உண்மை. அவனே அகத்தின் இதயம். அவனே யாவற்றுள்ளும் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவன். இந்த அகிலத்தின் சாரம் அவனே. இயற்கையின் பல்வேறு வகைகளுள்ளும், பல்வேறு வேறுபாடுகளுள்ளும் இரண்டாவதாக ஒரு பொருளை அனுமதிக்காத ஏகத்துவமாக அவன் இருக்கின்றான். அந்த

அமரத்துவம் வாய்ந்த, அனைத்துள்ளும் ஊடுருவி யிருக்கின்ற, அனைத்து ஆனந்தமாகவும் இருக்கின்ற பிரம்மம் நீ. நீ அதுவாக இருக்கின்றாய் — தத்துவ மசி. இதனை உணர்ந்து பந்தமற்று விளங்குவாய்.

பிரம்ம சூத்திரங்களின் நான்கு முக்கியமான சுலோகங்களை நினைவுகொள். 1) அத—அதோ பிரம்ம ஜிஞ்ஞாசா—இனி, ஆதலால், பிரம்மத்தைப் பற்றி ஆய்வோம். 2) ஜன்மாத் யஸ்ய யதத்—எதிலிருந்து மூலம் தொடங்குகிறதோ முதலியன 3) சாஸ்த்ரா யோனித்வத்—வேதங்கள் மெய்யறிவுக்கு வாயிலாக இருக்கின்றன. 4) தத் து ஸமன்வயத்—ஆனால், அஃது ஏனெனில், அதுவே முக்கியமான ஆதாரமாக இருக்கின்றது.

ஜெயகுரு சிவகுரு ஹரி குரு ராம்
ஜெகத்குரு பரம்குரு சத்குரு ஷ்யாம்
என்று இனிப் பாடுங்கள்.

**ஸ்ரீ வியாசரையும் பிரம்ம வித்தையைக் கற்பிக்கும் குருமார்களையும் நினைவு கூர்ந்து வழிபடுங்கள். உங்கள் அனைவர் மீதும் அவர்களுடைய நல்லாசிகள் பொழிக! நீங்களனைவரும் அவித்தையின் முடிச்சையை வெட்டியெறிந்து ஆசிபெற்ற ஜீவன் முக்தர்களாக ஒளி பெறுக! அமைதியையும் மகிழ்ச்சியையும் ஒளியையும் எங்கும் பரப்புவீராக!**

---

# படலம் நான்கு

## மகரிஷி வியாசரும் இந்துமத நூல்களுக்கு அவர் வழங்கியுள்ள கொடையும்

**நமோஸ்துதே வியாஸ விசால புத்தே**
**புல்லாரவிந்தாயத பத்ரநேத்ரா,**
**யேன த்வய பாரத தைல பூர்ணு ப்ரஜ்வாஸிதோ**
**ஞானமய ப்ரதீப.**

**— அகண்ட பேரறிவும், இதழ்கள் முழுதும் மலர்ந்த தாமரைகள் போன்ற பெரிய கண்களும் வாய்ந்து, மகாபாரதம் என்ற எண்ணெய் நிறைந்த அறிவாகிய விளக்கை ஏற்றிய, ஓ! வியாச பகவானே! உனக்கு வணக்கங்கள்.**

**— (கீதை தியானம்)**

முற்காலத்தில், நம் மூதாதையராகிய ஆரிய வர்த்த ரிஷிகள், இந்துமதப் பஞ்சாங்கத்தில் குறிப்பிட்ட முக்கியத்துவம் வாய்ந்த நாளாகிய, வியாச பௌர்ணமியை அடுத்து வருகின்ற நான்கு மாதங்களும் தவம் செய்வதற்காகக் காட்டிற்குச் சென்றனர். மறவாமல் நினைவில் போற்ற வேண்டிய இந்நாளில், இறைவனுடைய அவதாரமேயாகிய வியாசர் பிரம்ம சூத்திரங்களை எழுதத் தொடங்கினர். நம் முன்னேய ரிஷிகள் குகைகளிலும் காடுகளிலும் இத்தவத்தைச் செய்தனர். ஆனல் இன்று காலம் மாறிவிட்டது. நான்காம் ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தங்களால் முடிந்த உதவிகளையும் வசதிகளையும் அன்போடும் ஆர்வத்தோடும் செய்யக்கூடிய அரசர்களும், இல்வாழ்வோரும் இருக்கிறார்கள் என்றாலும், இக்காலத்தில் பழங்காலம் போன்ற வசதிகள் குறைவு. காடுகளுக்கும் குகைகளுக்கும் பதில் குருத்துவாரத்திலும் மடங்களிலும் அறைகள் இருக்கின்றன. தேவைகளைக்

காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்றவாறு ஒருவர் அமைத்துக் கொள்ள வேண்டியிருக்கின்றது. இட மாற்றமும் சூழ்நிலை மாற்றமும் நம் மனச் சார்பில் வேறுபாட்டை உண்டாக்க இடந்தரலாகாது. வியாச பௌர்ணமி நாளிலிருந்து சாதுர் மாத விரதம் தொடங்குகிறது. நம் மத நூல்களின்படி இந்நாளில் நாம் வியாசரையும் பிரம்ம வித்தையைக் கற்பிக்கும் குருமார்களையும் தொழுது பிரம்ம சூத்திரங்களையும், மெய்யறிவு போதிக்கும் ஏனைய பழம் பெரு நூல்களையும் பயிலத் தொடங்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## கிருஷ்ண துவைபாயனரின் தோற்றம்

நம் புராணக் கதைகள் பல வியாசர்களைப் பற்றிப் பேசுகின்றன. துவாபர யுகத்தின் இறுதியில் பிறந்த கிருஷ்ண துவைபாயனர் — நாம் இப்போது பேசுகின்ற வியாசர்; இவருக்கு முன்பு இருபத்தெட்டு வியாசர்கள் இருந்தார்கள் என்று சொல்லப்படுகிறது. விசித்திரமான வியக்கத்தக்க சந்தர்ப்பத்தில், மச்சகன்னி சத்தியவதி தேவி வாயிலாகப் பராசர முனிவருக்கு அவர் பிறந்தார். பராசரர் பெரு ஞானியாகவும் சோதிடக் கலையில் மிகப்பெரும் நிபுணர்களில் ஒருவராகவும இருந்தார்; அவருடைய நூலாகிய 'பராசர ஓரை' இன்னும் சோதிடக் கலைப் பாட நூல்களில் நன்றாக இருக்கிறது. சமூக வளர்ச்சி இயல், நீதி நூல்கள் ஆகியவைபற்றி எழுதும் இந்நாளைய எழுத்தாளர்கள் மேற்கோள் காட்டும் அளவு உயர்வாகக் கருதப்படுகின்ற 'பராசரஸ்மிருதி' யையும் அவர் எழுதியுள்ளார். குறிப்பிட்ட நாழிகையில் பிறக்கும் குழந்தை அந்த யுகத்தில் மிகப் பெரும் மனிதனாக, இல்லை, மகாவிஷ்ணுவின் அம்சமாக விளங்குவான் என்பதை அவர் அறிந்தார். அன்று பராசரர் ஓர் பட

கில் போய்க் கொண்டிருந்தார்; படகோட்டியினிடம், அந்தச் சுப வேளை நெருங்கிக் கொண்டிருப்பதைப்பற்றி எடுத்துரைத்தார். அவனுக்குத் திருமண வயதை எட்டிய ஒரு பெண் இருந்தாள். முனிவரின் பெருமையிலும் தூய்மையிலும் மனம் பதிந்த படகோட்டி தன் பெண்ணைப் பராசரருக்குத் திருமணம் செய்து கொடுத்தான். தாழ்ந்த இனத்தவளாக இருந்த போதிலும் அவளுடன் ஒன்றிய, மிகப் பெருமை வாய்ந்த வரிசையில் இருந்த ஒரு ஞானியின் திருமணத்தைச் சிவ பெருமானே மகிழ்ந்து நல்லாசிகள் வழங்கியமையால் அவர்களுக்கு வியாசர் பிறந்தார் என்று சொல்லப்படுகிறது.

## இந்துமத நூல்களுக்கு அவர் வழங்கிய பெருங்கொடை

காட்டிற்குச் சென்று அகண்ட தவம் செய்ய வேண்டுமென்ற தம் வாழ்வின் இரகசியத்தை வியாசர் மிகவும் இளம் வயதிலேயே தம் பெற்றோர்களிடம் தெரிவித்தார். அவருடைய தாயார் முதலில் இசையவில்லை; ஆனால் பின்னர், தாம் எப்போது விரும்பினாலும் தம் முன்னிலையில் அவர் தோன்ற வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் அனுமதி தந்தார். பெற்றோரும் மகனும் எவ்வளவு முன்யோசனை உள்ளவர்களாக இருந்தனர் என்பதையே இது காட்டுகிறது. வியாசர் தம் குரு பரம்பரையில் வந்த இருபத்தோராவது குருவாகிய வசுதேவஞானியினிடத்தில் தீக்ஷை பெற்றார் என்று புராணங்கள் தெரிவிக்கின்றன. சனகர், சனந்தர் ஆகியோரிடத்திலும் மற்ற முனிவர்களிடத்திலும் அவர் சாஸ்திரங்களைப் பயின்றார். மனித குலத்தின் நன்மைக்காக அவர் வேதங்களைத் தொகுத்து நான்காக வகுத்தார்; சுருதிகளை எளி

தாகவும் விரைவாகவும் புரிந்து கொள்வதற்காகப் பிரம்ம சூத்திரங்களை எழுதினார்; உயர்ந்த தத்துவங்களைப் படிப்பில்லாத மகளிரும் பாமர மக்களும் மிகவும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு மகாபாரதத்தையும் இயற்றினார்; பதினெண் புராணங்களைப் படைத்து உபாக்கியானங்கள் அல்லது சொற்பொழிவுகள் வாயிலாக அவற்றை விளக்கிச் சொல்லும் முறையை நிறுவினார். இவ்வாறு அவர் கர்மம், உபாசனை, ஞானம் என்ற மூன்று வழிகளை ஏற்படுத்தினார். தம் தாய் வழி வம்சம் வளரச் செய்த உண்மையும் அவருக்கு உரியதாக்கித் திருதராஷ்டிரர், பாண்டு, விதுரர் ஆகியோர் அவருடைய சந்ததியாவர் என்று சொல்லப்படுகிறது. தேவரிஷி நாதர் ஒரு முறை, அவரைச் சந்தித்துப் பாகவதத்தை எழுதவில்லையெனில் அவருடைய வாழ்வின் குறிக்கோள் நிறைவு பெருது என்று அறிவுறுத்தித் தூண்டியதனால் அவர் பாகவதத்தை எழுதினார். அதுவே அவர் எழுதிய கடைசி நூல்.

இந்துக்கள் அனைவரும் வியாசரை ஒரு சிரஞ்சீவி என்றும், தம் சீடர்களின் பொருட்டு அவர் இன்னும் உயிருடன் உலகில் உலவி வருகிறார் என்றும், உண்மையும் நம்பிக்கையும் வாய்ந்தவர்களுக்கு அவர் தோன்றுகிறார் என்றும் கருதுகிறார்கள். ஞானி மண்டன மிசிரரின் இல்லத்தில் ஜகத் குரு சங்கராச்சாரியருக்கு அவருடைய தரிசனம் கிடைத்தது என்றும், இவ்வாறே இன்னும் பலருக்கும் அவர் காட்சியளித்தார் என்றும் சொல்லப்படுகிறது. எனவே, சுருங்கச் சொன்னால், உலக நன்மையின் பொருட்டு அவர் வாழ்கிறார். உலகனைத்தின் மீதும் நம் அனைவர் மீதும் அவருடைய நல்லாசிகள் பொழியுமாறு நாம் அவரை இறைஞ்சுவோம்!

## 'பிரம்ம சூத்திரங்கள்' நூலும் மாறுபட்ட உரை விளக்கங்களும்

சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பூர்வ மீமாம்சை, உத்திர மீமாம்சை அல்லது வேதாந்தம் என்ற ஆறு வைதிகத் தத்துவ நெறிகளை, ஷட் தர்சனங்களை நம்முன்னோர்கள் வளர்த்த ஆறு முக்கிய சமய நெறிகள் என்ற உண்மை ஒவ்வொருவருக்கும் தெரியும். ஒவ்வொரு நெறியிலும் மாறுபட்ட கருத்து நிழலிடுகிறது பிற்காலத்தில் இத்தகைய மாறுபாடுகள் அளவற்று வளர்ந்துவிட்டமையால் அவற்றை ஒழுங்கு படுத்தும் பொருட்டுச் சூத்திரங்கள் உருவாயின. வடமொழியில் ஒவ்வொரு தலைப்பைப் பற்றியும் நீண்ட விவாதத்தை நினைவூட்டும் உதவி அல்லது துப்பு என்று பொருள் படும், சூத்திரங்கள் என்ற சுருக்கமான பழமொழிகளாக நூல்கள் இயற்றப்பட்டன. சூத்திரம் என்பது சுருக்கமாகவும், இருபொருள் படாமலும் இருக்க வேண்டும் என்று பத்ம புராணத்தில் இச் சூத்திரம் என்ற சொல்லுக்கு விளக்கம் தரப்பட்டுள்ளது; ஆனால் சுருக்கம் என்ற நிலை புரிந்து கொள்ள முடியாத அளவுக்குப் பின்பற்றப்பட்டது; குறிப்பாகப் பிரம்ம சூத்திரங்கள் அவ்வாறு அமைந்துள்ளன. ஒரே சூத்திரத்திற்குப் பன்னிரண்டு வகையான விளக்கங்கள் தரப்படுவதை இன்று பார்க்கின்றோம். வியாசர் அல்லது பாதராயணர் —இப்பெயரும் அவருக்கு உண்டு எழுதிய பிரம்ம சூத்திரங்கள் வேதாந்தத்தைப் பற்றிப் பேசுவதனால் அவற்றை வேதாந்த சூத்திரங்கள் என்றும் வழங்கினர். அவை நான்கு அதிகாரங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன; ஒவ்வோரதிகாரமும் மீண்டும் நான்கு உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மனத்தைக் கவர்கின்ற ஒரு செய்தி – இச்சூத்திரங்களின் தொடக்கமும் முடிவுமாக இருப்பவை,

''பிரம்மத்தின் உண்மையான இயல்பைப் பற்றிய விசாரணை மீட்சி இல்லாதது'' என்ற ஒரே செய்தியைக் கூறுகின்றன. இவற்றின் கருத்து, 'இவ்வழியில் சென்றால் ஒருவர் மீளாத அமரத்துவத்தை அடையலாம்' என்பதும் 'இவ்வுலகுக்கு அன்னவர் மீள்வதில்லை'; என்பதும் ஆகும். இச்சூத்திரங்களின் ஆசிரியர் வியாசர் என்பது ஐதீகம். சங்கராச்சாரியார் தம் உரையில், கீதை, மகாபாரதம் ஆகியவற்றின் ஆசிரியர் வியாசர் என்றும், பிரம்ம சூத்திரங்களின் ஆசிரியர் பாதராயணர் என்றும் குறிப்பிட்டுள்ளார். அவருடைய சீடர்களான வாசஸ்பதி, ஆனந்தகிரி, இன்னும் பலர், இருவரும் ஒருவரே என்று கூறுகின்றனர். ஆனால் இராமானுஜரும் மற்றவர்களும் பிரம்ம சூத்திரங்களின் ஆசிரியர் வியாசர் என்றே கொள்ளுகின்றனர். பிரம்ம சூத்திரங்களின் மிகப் பழைய உரையை வழங்கியவர் சங்கராச்சாரியார். அவரைப் பின் தொடர்ந்த இராமானுஜர், வல்லப நிம்பர்க்கர், மத்துவர் இன்னும் மற்றவர்கள் தத்தம் கொள்கைப் பிரிவுகளை நிலை நாட்டினர். அவர்களில் முக்கியமானவர்கள் ஐவர், பின்வரும் இரண்டு கருத்துக்களைப் பெரிதும் ஏற்றுக்கொள்ளுகின்றனர். 1) இவ்வுலகத் தோற்றத்திற்குக் காரணம் பிரம்மமே. 2) பிரம்மத்தைப்பற்றிய அறிவு முக்திக்கு வழி கோலுகிறது. ஆனால் பிரம்மத்தின் இயல்பு, தனி ஆன்மாவுக்கும் பரமான்மாவுக்கும் உள்ள தொடர்பு, முக்தியில் ஆன்மாவின் நிலை என்பவை பற்றி அவர்கள் வேறுபடுகிறார்கள். அவர்களில் சிலர் சங்கரர் வற்புறுத்திய ஞானத்தை மறுத்துப் பக்தியே முக்திக்கு முதன்மையான வழி என்று கொள்ளுகின்றனர்.

ஆன்மீக அறிவைப் பரப்புவதற்காகத் தோன்றியவர்களில் வியாசரின் வாழ்க்கை இணை

யற்ற எடுத்துக்காட்டாகும். இன்றும் அவருடைய எழுத்துக்கள் நமக்கும் உலகனைத்துக்கும் கிளர்ச்சியை ஊட்டுகின்றன. அவருடைய எழுத்துக்களின் சாரத்தைப் பின்பற்றி நாம் அனைவரும் வாழ்வோமாக!

## படலம் ஐந்து

## ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி

**நிதயே சர்வவித்யானும் பீஷஜே பவரோகிணும்**
**குரவே சர்வலோகானும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:**

**— எல்லாக் கல்வித் துறைகளின் இருப்பிடமாகவும், பிறவிப் பிணியால் வருந்தும் அனைவர்க்கும் வைத்திய நாதனாகவும், அனைவர்க்கும் ஆசிரியராகவும் இருக்கின்ற தென்முகக் கடவுளுக்குப் பணிவான வணக்கங்கள்.**

**— குருகீதை**

கைலாச மலையில் அழகிய மணிகளால் அலங்கரிக்கப்பெற்ற கூடத்தில் பக்கத்தே பார்வதி தேவியுடன் சிவபெருமான் அமர்ந்திருந்தார். அப்போது அம்பிகை இறைவனைப் பணிந்து தொழுது, தான் தக்ஷனுக்கு மகளாகப் பிறந்தமையால் தனக்கு ஏற்பட்ட தாக்ஷாயணி என்ற பெயரை மாற்றும்படி இறைஞ்சினாள். தக்ஷன் ஆணவத்தோடு இருந்தமையாலும், சிவபெருமானை நிந்தித்தமையாலும், அவன் அவரால் கொல்லப்பட்டான். தேவியின் வேண்டுகோளைக் கேட்டவுடனே, குழந்தைப் பேற்றை வேண்டிக் கடுந்தவம் இயற்றிக் கொண்டிருந்த பர்வதராஜனுக்குப் பெண்ணாகப் பிறக்கும்படிச் சிவபிரான் எம்பிராட்டிக்கு ஆணையிட்டார். தாமே வந்து மணந்துகொள்வதாகவும் அவர் பார்வதியிடம் தெரிவித்தார். இவ்வாறு ஆக்ஞையிடப்பெற்றுப் பார்வதிதேவி பர்வத

ராஜனுக்குப் பெண் குழந்தையாகப் பிறந்தார்; ஐந்தாம் ஆண்டிலிருந்தே சிவபெருமானுடைய தேவியாக ஆவதற்குக் கடுந்தவம் செய்யத் தொடங்கினார்.

தேவி அருகில் இல்லாமல் சிவபெருமான் தனித்திருந்த அப்போது நான்முகனின் குமாரர்களான ஞானிகள் சனகர், சனந்தனர், சனாதனர், சனத் குமாரர் ஆகிய நால்வரும் சிவபெருமானைத் தரிசிக்க வந்து பணிந்து நின்றனர். அவித்தையை நீக்கி முக்தியைப்பெறும் வழியைக் கற்பிக்குமாறு அவர்கள் இறைவனை வேண்டினர். பரப்புமிகுந்த வேதங்களை ஆழப் பயின்றும் மன அமைதிபெற முடியவில்லையென்றும், முக்தியை அடைவதற்கு வாயிலாக உள்ள உள்மனத்தின் இரகசியங்களைத் தெரிந்துகொள்ளும் ஞானம் பெறவேண்டியுள்ள இன்றியமையாமையைத் தெரிவித்தனர்.

முனிவர்கள் விடுத்த வேண்டுகோளைச் செவியுற்றுச் சிவபெருமான், தென்முகம் நோக்கியிருக்கும் கோலத்தை மேற்கொண்டார்; பரமகுருவாக இருந்து மௌனத்தின் வாயிலாக உள்மனத்தின் இரகசியங்களைக் கற்பிக்கத் தொடங்கிக் கையில் சின் முத்திரையைக் காட்டினார். இறைவன் காட்டிய வழியினைப் பின்பற்றி முனிவர்கள் தியானம் செய்யத் தொடங்கிச் சொற்களால் விளக்கிச்சொல்ல முடியாததும், கங்கு கரையற்றதுமாகிய பேரின்பநிலையை அடைந்தனர்.

இவ்வாறு சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தி என்னும் பெயரைப் பெற்றார். தென்முகக் கடவுளின் நல்லாசிகள் நம் அனைவர்மீதும் பொழிக! நீங்கள் அனைவரும் அவருடைய கருணையால் என்றென்றும் நிலைத்த அமைதியும், இன்பமும் ஆகிய கடலில் மூழ்கித் திளைத்து மகிழ்வீர்களாக!

# படலம் ஆறு

## தத்தாத்ரேய பெருமானும் அவருடைய இருபத்திநான்கு குருமார்களும்

ஆதௌ பிரம்மா, மத்யே விஷ்ணுர், அந்தே தேவ
சதாசிவ:
மூர்த்தித்ரய ஸ்வரூபாய, தத்தாத்ரேய
நமோஸ்துதே.

— ஆதியில் நான்முகனும், நடுவில் விஷ்ணுவும், இறுதியில் சதாசிவமும் ஆக இருக்கின்ற, மும்மூர்த்திகளின் வடிவாக இருக்கின்ற தத்தாத்ரேய பெருமானுக்குப் பணிவான வணக்கங்கள்.

பிரம்ம ஞானன் மயீ முத்ரா, வஸ்த்ரே ச ஆகாச
பூதலே,
பிரஜ்ஞான கன போதயா தத்தாத்ரேய
நமோஸ்துதே

— பிரம்ம ஞானமே முத்திரையாகவும், விண்ணும் மண்ணுமே ஆடையாகவும் கொண்டு, செறிந்த உள்ளுணர் ஞானமே வடிவாக இருக்கின்ற, கிர்நார்மலை இறைவனுக்கு மீண்டும் மீண்டும் பணிவான வணக்கங்கள்

— (ஸ்ரீ சங்கராச்சாரியார்)

கற்பிற்கு எடுத்துக்காட்டாகப் பெரும்பாலும் புகழப்படும் அனுசூயை, சப்த ரிஷிகளில் ஒருவரும் மகா முனிவருமாகிய அத்திரி மகரிஷியின் பத்தினியாவார். பதிவிரத தர்மத்தில் அவர் உறுதியாகச் சிறந்து விளங்கினார். தம் கணவருக்கு ஆழ்ந்த பக்தியுடன் சேவை செய்தார். நான்முகன், விஷ்ணு, சிவபெருமான் ஆகியோருக்கு இணையான மக்களைப் பெற விரும்பி நீண்ட காலம் அவர் கடுந்தவம் புரிந்தார்.

ஒருமுறை, நாரதர் இரும்பாலான, சிறிய கடலை உருண்டையை எடுத்துக்கொண்டு சரஸ்வதியை அடைந்து, 'சரஸ்வதி தேவியே! அருள் கூர்ந்து இந்த இரும்பு உருண்டையை வறுத்துத் தாருங்கள். என் பயணத்தின் போது இந்த இரும்பு உருண்டைத் தானியத்தை உண்பேன்!' என்று வேண்டினார். சரஸ்வதி தேவி சிரித்தபடி, 'நாரத ரிஷியே! இரும்பு உருண்டையை எப்படி வறுப்பது? எப்படி உண்பது?' என்று வினவினார். பின்னர் நாரதர் மகாலட்சுமி, பார்வதி ஆகியோரை அடைந்து, இரும்பு உருண்டையை வறுத்துத் தருமாறு வேண்டினார். அவர்களும் நாரத ரிஷியைப் பார்த்து எள்ளி நகையாடினர். பின்னர் நாரதர், தேவிமார்களே! மண்ணுலகில் வாழும், பெருமை வாய்ந்த பதிவிரதையாகிய, அத்திரி மகரிஷியின் பத்தினி அனுசூயாவினிடம் தந்து வறுக்கச் செய்து பெறுகிறேன், பாருங்கள்!' என்று தெரிவித்தார்.

பிறகு நாரதர் அனுசூயாவினிடம் வந்து இரும்பு உருண்டைத் தானியத்தை வறுத்துத் தருமாறு வேண்டினார். அனசூயா அந்த இரும்பு உருண்டையை, வறுக்கும் வாணலியில் இட்டுத் தம் கணவரைத் தியானித்துத் தம் கணவரின் பாத கமலங்களை மங்கள நீராட்டிய புனித நீரின் சில துளிகளை அந்த இரும்பு உருண்டையின் மீது தெளித்தார். இரும்பு உருண்டை உடனே வறுக்கப் பட்டது. நாரதர், சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோரை அடைந்து அவர்கள் கண்ணுரக் காணும்படி, வறுக்கப்பட்ட இரும்பு உருண்டைத் தானியத்தை உட்கொண்டு, அதில் சிறிதளவு அவர்களுக்கும் தந்தார். அவர் அனுசூயாவின் கற்புத் திறனையும் பெருமையையும் வெகுவாகப் புகழ்ந்தார். பின்னர், நான்முகன், விஷ்ணு, சிவபெருமான்

ஆகியோருக்கு இணையான மக்களைப் பெறவேண்டும் என்று விரும்பிய அனுசூயாவின் விருப்பத்தை நிறைவேற்ற முடிவு செய்தார்.

சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோரிடம் அவர், 'நீங்கள் உங்கள் கணவன்மாருக்கு நம்பிக்கை, நேர்மை, பக்தி ஆகிய பண்புகளுடன் சேவை செய்திருந்தால் நீங்களும் இரும்பு உருண்டையை வறுத்திருக்க முடியும். அனுசூயாவின் பதிவிரத தர்மத்தைச் சோதிக்குமாறு உங்கள் கணவன்மாரை வேண்டிக் கொள்ளுங்கள்,' என்று தெரிவித்தார். அவ்வாறே சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோர் தங்கள் கணவன்மாரிடம், அத்திரி மகரிஷியின் பத்தினி அனுசூயாவின் பதிவிரத தர்மத்தைச் சோதிக்குமாறு வேண்டினர்; நிர்வாணமாக இருந்து பிக்ஷையிடுகின்ற நிர்வாண பிக்ஷையை வழங்கச் சொல்லி அவரிடம் தெரிவிக்குமாறு கூறினர்.

நாரதருடைய செயலையும் அனுசூயாவின் தவத்தையும் விருப்பத்தையும் மும்மூர்த்திகளும் ஞான திருஷ்டியால் அறிந்தனர். எனவே அவர்கள் இசைந்தனர். அம்மூவரும் துறவிகளைப் போல் வேடங்கொண்டு அனுசூயாவின் முன் தோன்றி நிர்வாண பிக்ஷை வழங்குமாறு வேண்டினர். அனுசூயா பெருங் குழப்பத்தை அடைந்தார். பிக்ஷுக்களுக்கு 'இல்லை' என்று அவர் கூறமுடியாது. பதிவிரத தர்மத்தையும் அவர் கடைப்பிடிக்க வேண்டும். தம் கணவரைத் தியானித்து அவருடைய திருவடிகளை அடைக்கலம் புகுந்து, தம் கணவரின் பாத கமலங்களை மங்கள நீராட்டிய நீரின் சில துளிகளைத் துறவிகளின் மீது தெளித்தார். சரணம்ருத நீரின் மகிமையால் மும்மூர்த்திகளும் மூன்று குழந்தைகளாயினர். அதே சமயம் அனு

சூயாவின் மார்பகங்களில் பால் சுரந்தது. அக் குழந்தைகளைத் தான் பெற்ற குழந்தைகளாகவே பாவித்து நிர்வாண நிலையில் அவர்களுக்குப் பால் புகட்டித் தொட்டிலில் இட்டார். நீராடச் சென்ற தம் கணவரின் வருகையை அவர் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்.

அத்திரி முனிவர் இல்லத்திற்குத் திரும்பி வந்த வுடனே அனுசூயை அவரிடம், அவர் அங்கு இல்லாத பொழுது நிகழ்ந்தவற்றை எல்லாம் தெரிவித்து அம்மூன்று குழந்தைகளையும் அவருடைய திருவடி களில் கிடத்தி அவரைத் தொழுது நின்றார். ஆனால் அத்திரி முனிவர் தம் ஞானக் கண்ணால் இவற்றை யெல்லாம் ஏற்கனவே அறிந்திருந்தார். அவர் மூன்று குழந்தைகளையும் வாரியணைத்துக் கொண் டார். மூன்று குழந்தைகளும், இரண்டு கால்கள், ஓர் உடம்பு, மூன்று தலைகள், ஆறு கைகளைக் கொண்ட ஒரு குழந்தையாக மாறின. அத்திரி முனிவர் தம் மனைவியை வாழ்த்தி அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற மும்மூர்த்திகளே குழந்தைகளின் வடிவம் கொண்டனர் என்று அறிவித்தார்.

நாரதர், பிரம்ம லோகம், வைகுண்டம், கைலாசம் ஆகிய இடங்களுக்குச் சென்று, சரஸ் வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோரிடம், அவர்களின் கணவன்மார்கள் அனுசூயையினிடம் நிர்வாண பிக்ஷை கேட்ட பொழுது, அந்த அம்மையாரின் பதிவிரத தர்மத்தின் சக்தியால் அவர்கள் குழந்தை களாக மாற்றப்பட்டனரென்றும், எனவே அம் மூன்று தேவிமார்களும் அத்திரி முனிவரிடம் பதி பிக்ஷை வேண்டிக் கொண்டாலன்றி மும்மூர்த்தி களும் திரும்பி வரமுடியாதென்றும் தெரிவித்தார். சரஸ்வதியும் லக்ஷ்மியும் பார்வதியும் சாதாரணப்

பெண்களைப் போல் வடிவங் கொண்டு அத்திரி முனிவரின் முன் சென்று, ரிஷியே! 'எங்கள் கணவன் மாரைத் திருப்பித் தாருங்கள்,' என்று பதிபிக்ஷை வேண்டினர். அத்திரி முனிவர் அவர்கள் மூவரை யும் முறையாகப் பெருமைப் படுத்தித் தம் இரு கரங்களையும் கூப்பி அவர்களைத் தொழுது தம் விருப்பமும் அனுசூயையின் விருப்பமும் நிறை வேற்றப் படவேண்டும் என்று இறைஞ்சினர். அப்போது மும்மூர்த்திகளும் தங்கள் உண்மை வடி வில் அத்திரி முனிவரின் முன் தோன்றி, நீங்கள் சொன்னவாறு இக்குழந்தை பெரிய ஞானியாக விளங்குவான். அனுசூயையின் விருப்பத்தின்படியே இவன் எங்களுக்கு இணையாகத் திகழ்வான். இக் குழந்தை தத்தாத்ரேயன் என்ற பெயரைத் தாங்கு வான்,' என்று கூறினர். பின்னர் அவர்கள் மறைந்தனர்.

தத்தாத்ரேயர் மும்மூர்த்திகளின் ஒளி பெற்ற வராகவும் பெரிய ஞானியாகவும் இருந்தமையால் எல்லா முனிவர்களும் துறவிகளும் அவரைத் தொழு தனர். அவர் சாதுவாகவும் சாந்தமாகவும் இனிய இயல்புள்ளவராகவும் இருந்தார். எப்போதும் திரளான மக்களின் கூட்டம் அவரைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தது. தத்தாத்ரேயர் இதனைத் தவிர்க்க முயன்றார்; ஆனால் அவருடைய முயற்சிகள் பயனளிக்கவில்லை. பெருங் கூட்டம் அவரைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒரு சமயம், அவர் நதியில் நீராட இறங்கி மூழ்கி, மூன்று நாட்கள் வரை வெளிப்படவில்லை. அவர் ஜல சமாதி யடைந் திருந்தார். மூன்றும் நாள் அவர் வெளியில் வந்து, தாம் கரையேறுவதை எதிர்பார்த்து மக்கள் ஆற்றின் இரு கரைகளிலும் இன்னும் அமர்ந்திருப் பதையே கண்டார்.

இத்தகைய வழியால் மக்களைத் தவிர்க்கும் முயற்சியில் அவர் வெற்றி பெறவில்லை. வேறொரு திட்டத்தை அவர் மேற்கொண்டார். தம் யோகத் திறமையால் அவர் ஒரு அழகான பெண்ணையும் ஒரு மதுப்புட்டியையும் தோற்றுவித்தார். ஒரு கையில் பெண்ணையும் மற்றொரு கையில் மதுப்புட்டியையும் ஏந்தியவராக நீரினின்றும் வெளிப் பட்டார். இதைப் பார்த்த மக்கள் தத்தாத்ரேயர் யோகத் திலிருந்து வழுவி விட்டார் என்று கருதி அவரைப் புறக்கணித்து அப்பாற் சென்று விட்டனர்.

தத்தாத்ரேயர் தம் சொந்த உடைமைகள் அனைத்தையும், கந்தை ஆடையையும் தூர எறிந்து அவதூதராகிவிட்டார். வேதாந்த உண்மைகளைப் போதிக்கவும் பரப்பவும் அவர் புறப்பட்டார். சுப்பிரமணியக் கடவுளுக்கு (அல்லது கார்த்திகேய ருக்கு) அவர் தம் கீதையாகிய அவதூத கீதையைக் கற்பித்தார். இது வேதாந்த உண்மைகளையும் இரகசியங்களையும் விளக்குவதாகவும் மெய்யுணர்வே நேரே அனுபவிக்கச் செய்வதாகவும் உள்ள உயர்ந்த நூலாகும்.

ஒரு முறை தத்தாத்ரேயர் காட்டில் மகிழ்ச்சி யுடன் திரிந்து கொண்டிருந்தபோது யது மன்னனைச் சந்தித்தார். பெருமகிழ்ச்சியுடன் இருந்த தத்தாத் ரேயரைப் பார்த்த அவ்வரசன் அவருடைய மகிழ்ச் சியின் இரகசியங்களையும், கூடவே அவருடைய குருவின் பெயரையும் வினவினான். ஆன்மாவே தம் குரு என்று தத்தாத்ரேயர் கூறினார். இருப் பினும் அவர் இருபத்தி நான்கு தனி நபர்களிட மிருந்து ஞானத்தைக் கற்றுக்கொண்டதனால் அந்த இருபத்தி நான்கு பேரும் அவருடைய குருமார்கள் ஆவார்.

பின்னர் தத்தாத்ரேயர் தம்முடைய இருபத்தி நான்கு குருமார்களின் பெயர்களேயும் குறிப்பிட்டு ஒவ்வொருவரிடமிருந்தும் தாம் கற்றுக் கொண்ட ஞானத்தைப் பற்றி எடுத்துரைத்தார்.

''என்னுடைய இருபத்திநான்கு குருமார்களின் பெயர்களாவன:— 1) நிலம் 2) நீர் 3) காற்று 4) நெருப்பு 5) ஆகாயம் 6) சந்திரன் 7) சூரியன் 8) புரு 9) மலேப்பாம்பு 10) கடல் 11) விட்டிற் பூச்சி 12) தேனீ 13) தேன் எடுப்பவன் 14) யானே 15) மான் 16) மீன் 17) நாட்டியப் பெண் பிங்கலே 18) அண்டங்காக்கை 19) குழந்தை 20) கன்னிப் பெண் 21) பாம்பு 22) கணேயைக் கூர்ப்படுத்தும் கொல்லன் 23) சிலந்திப் பூச்சி 24) குளவி.''

1) நிலம் தன் மேல் நின்றுகொண்டு மனிதன் தோண்டுதல் முதலிய துன்பங்களேத் தரும்போதும் பொறுமையுடன் தாங்கிக் கொள்வதோடன்றிப் பயிர்களே விளேவித்தல், மரங்களே வளரச் செய்தல் முதலிய பலவகை உதவிகளேச் செய்வதனுல், நிலத்தைப் பார்த்து, மற்றவர்களுக்கு நன்மை செய்தலேயும் பொறுமையைக் கடைப்பிடிப்பதையும் கற்றுக்கொண்டேன்.

2) நீரைப்பார்த்துத் தூய்மைக் குணத்தைக் கற்றுக்கொண்டேன். தூய நீர் மற்றவர்களேத் தூய்மைப் படுத்துவதுபோலத், தன்னலம், காமம், அகம்பாவம், சினம், பேராசை முதலிய குற்றங்களி லிருந்து விடுபட்டுத் தூய்மையோடிருக்கின்ற ஞானி தம்மோடு தொடர்புகொள்ளும் அனேவரையும் தூய்மைப் படுத்துகிருர்.

3) காற்று எப்போதும் பல்வேறு பொருள்களி னூடே வீசிக்கொண்டிருக்கிறது; ஆனுல் அவற்றுள் எதனுலும் அது பந்தப்படுவதில்லே; எனவே நானும்

இவ்வுலகில் பல்வேறு மக்களோடு பழகினுலும் பந்தப்படாமல் இருக்கக் கற்றுக்கொண்டேன்.

4) நெருப்பு ஒளிமிகுந்து எரிவதுபோல், ஞானியும் தம் தவத்தினுலும் ஞானத்தாலும் ஒளி மிகுந்து பொழிவுடன் காணப்படவேண்டும்.

5) காற்று, நட்சத்திரங்கள், மேகங்கள் முதலியன யாவும் ஆகாயத்தில் பொதிந்துள்ளன; ஆனுல் ஆகாயம் அவற்றுள் எதனுலும் தொடப் படாமல் இருக்கிறது. ஆன்மா எங்கும் வியாபித் துள்ளது; எனினும் அது எப்பொருளாலும் தொடப்படாமல் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

6) சந்திரன் தன்னளவில் நிறைவு பெற்றதாக இருக்கிறது; ஆனுல் அதன்மீது விழும் நிலத்தின் நிழல் வேறுபடுவதற்கேற்ப அது தேய்வதாகவோ, வளர்வதாகவோ காணப்படுகின்றது. ஆன்மா என்றும் நிறைவுள்ளதாகவும் மாறுபடாததாகவும் இருக்கின்றது; உபாதிகள் அல்லது எல்லைக்குட்பட்ட உடன் சேர்ந்த பகுதிகள் மட்டுமே அதன் மேல் நிழல்களை ஏற்படுத்துகின்றன என்பதைப் புரிந்து கொண்டேன்.

7) நீர் நிறைந்துள்ள பல்வேறு குடங்களில் ஒரே சூரியன் பல்வேறு பிரதி பிம்பங்களைத் தோற்று விப்பதுபோலப் பிரம்மமும் பல்வேறு உபாதிகள் (உடம்புகள்) காரணமாக மனத்தின் வாயிலாகப் பல்வேறுவகைப் பட்டதாகத் தோற்றமளிக்கிறது. சூரியனுல் இதைத் தெரிந்துகொண்டேன்.

8) நான் ஒருமுறை, இளங் குஞ்சுகளுடன் ஜோடிப் புறுக்களைப் பார்த்தேன். ஒரு வேடன் கண்ணிவைத்துக் குஞ்சுகளைப் பிடித்தான். தாய்ப்

புறுவுக்குக் குஞ்சுகளின்மீது மிகுந்த பாசம் இருந்தது. தான் உயிர் வாழ்வதைப்பற்றிப் பொருட்படுத்தவில்லை யாதலால் அதுவும் கண்ணியில் வீழ்ந்து அகப்பட்டுக்கொண்டது. ஆண் புறுவுக்குப் பெண் புறுவிடம் மிகுந்த பாசம் இருந்தது. எனவே அதுவும் கண்ணியில் வீழ்ந்து அகப்பட்டுக் கொண்டது. பாசமே பந்தத்துக்குக் காரணம் என்பதை இதனால் தெரிந்துகொண்டேன்.

9) மலைப்பாம்பு தன் உணவின் பொருட்டு இங்கும் அங்கும் அசைவதில்லை. எது கிடைத்தாலும் திருப்தியடைந்து ஒரே இடத்தில் படுத்திருக்கிறது. உணவைப்பற்றிக் கவலைப்படாமல் இருக்கவும் உண்பதற்கு எதுகிடைத்தாலும் திருப்தியடையவும் (அஜகர விருத்தி) இதனால் கற்றுக்கொண்டேன்.

10) நூற்றுக்கணக்கான ஆறுகள் வந்து கலந்தாலும் கடல் அசைவற்று இருப்பதுபோல எல்லா வகையான மயக்கங்கள், இடையூறுகள், துன்பங்கள் ஆகியவற்றுக்கிடையே ஞானி அசையாமல் இருக்கவேண்டும். இது கடலைப்பார்த்து நான் கற்றுக் கொண்ட பாடம்.

11) நெருப்பின் சுடரொளியால் கவரப் படுகின்ற விட்டிற்பூச்சி அதில் வீழ்ந்து எரியுண்கிறது: அதுபோலவே மோகம் மிகுந்த மனிதன் அழகிய பெண்ணொருத்தியின் காதலில் வீழ்ந்து துன்பத்தைத் தேடிக் கொள்ளுகிறான். காட்சிப் புலனைக் கட்டுப்படுத்தி மனத்தைத் தன் ஆன்மாவில் நிலைநிறுத்த வேண்டும் என்பதை இதனால் தெரிந்துகொண்டேன்.

12) கருந்தேனீ ஒரு மலரில் மட்டும் தேன் உறிஞ்சாமல், பல்வேறு மலர்களிலிருந்து தேனை

உறிஞ்சுவதுபோலவே நானும் ஒரு வீட்டில் சிறிதளவே உணவைப்பெற்று, மற்ருெரு வீட்டில் சிறிதளவுபெற்று, இவ்வாறு என்பசியைத் தணித்துக் கொள்ளுகிறேன். (மது கரி பிக்ஷை அல்லது மது கரி விருத்தி) வீட்டாருக்கு நான் ஒரு சுமையல்ல.

13) தேனீக்கள் பெரும் சிரமத்துடன் தேனைச் சேகரிக்கின்றன; ஆனுல் தேன் சேகரிப்போன்வந்து மிக எளிதில் தேனை எடுக்கிருன். அதுபோலவே மக்கள் பெரும் அல்லற்பட்டுச் செல்வத்தையும் பிறபொருள்களையும் திரட்டுகிருர்கள்; ஆனுல் எமன் வந்து பற்றும்போது அவர்கள் உடனே அவை எல்லாவற்றையும் விட்டு விட்டுப் புறப்பட வேண்டியுள்ளது. பொருள்களைத் திரட்டிச் சேர்ப்பது பயனற்றது என்பதே இதனுல் தெரிந்து கொண்டேன்.

14) காமத்தால் குருடான ஆண் யானை காகிதத்தால் செய்த பெண் யானை பொம்மையைப் பார்த்தால்கூடப் புற்களால் மூடப்பட்டுள்ள குழியில் விழுந்து விடுகிறது. அது பிடிக்கப்பட்டுச் சங்கிலியால் பிணிக்கப்பட்டு அங்குசத்தால் சித்திர வதை செய்யப்படுகிறது. அதுபோலவே மோகம் மிகுந்த மனிதர் பெண்கள் விரித்த வலைகளில் விழுந்து துன்பத்துக்காளாகின்றனர் எனவே ஒருவன் காமத்தை அழிக்கவேண்டும். யானையால் நான் கற்றுக்கொண்ட பாடம் இது.

15) மான் இசையின்மீது கொண்டுள்ள பற்றுதல் காரணமாகக் கவரப்பட்டு, வேட்டை யாடுவோன் விரித்த வலையில் அகப்பட்டுக் கொள் கிறது. அதுபோலவே நடத்தை வழுவிய மகளிர் தம் இசையினுல் ஒருவன் கவரப்பட்டு அழிவைத்

தேடிக் கொள்ளுகிருன். காமச் சுவையுள்ள பாடல்களை ஒருவன் ஒருபொழுதும் செவியுறக் கூடாது. மானைப்பார்த்து நான் கற்றுக்கொண்ட பாடம் இது.

16) உணவின்மீது மோகங்கொண்ட மீன் தூண்டிலுக்கு எளிதில் பலியாகிறது; அதுபோலவே உணவின்மீது பேராசையுள்ளவன் உணவுச் சுவைக்கு அடிமையாகத் தன்னை ஆளாக்கிக் கொண்டு தன் சுதந்திரத்தை இழந்து எளிதில் அழிவைத் தேடிக்கொள்ளுகிருன். எனவே உணவின் மீதுள்ள இச்சை அழிக்கப்பட வேண்டும். மீனைப் பார்த்து நான் தெரிந்துகொண்ட பாடம் இது.

17) விதேக நகரில் பிங்கலை என்ற நாட்டிய மகள் இருந்தாள். ஓர் இரவு வாடிக்கையாளருக்காகக் காத்துக் காத்துச் சலித்துப்போனுள். அவள் ஏமாற்றமடைந்தாள். பின்னர் அவள் தன் பால் உள்ளதைக்கொண்டு திருப்தியுற்று அயர்ந்து உறங்கிவிட்டாள். எதிர்பார்த்தலைக் கைவிட்டால் அது மன நிறைவுக்கு வழிகோலுகிறது என்ற உண்மையை நான் அவ்விலைமகளின் பண்பினுல் தெரிந்துகொண்டேன்.

18) ஓர் அண்டங்காக்கை ஒரு மீன் துண்டைப் பற்றிக்கொண்டு மேலே பறந்தது. மற்ற காக்கைகள் அதைப் பின்தொடர்ந்து சென்று இம்சித்தன. அது அந்த இறைச்சித் துண்டைக் கீழே போட்டு விட்டு அமைதியும் ஓய்வும் அடைந்தது. உலகில் புலனின் பங்களைப் பின்தொடர்ந்து செல்லும் மனிதன் எல்லா வகையான கஷ்ட நஷ்டங்களையும் அடைகிருன் என்பதையும், அக்காக்கைபோலவே, புலனின்பங்களைக் கைவிடும்போது அவன் மகிழ்ச்சி

யடைகின்றான் என்பதையும் இதனால் தெரிந்து கொண்டேன்.

19) தாய்ப்பால் பருகும் குழந்தை ஏக்கங்கள், துன்பங்கள், கவலைகள் என்பவற்றிலிருந்து விடுபட்டுள்ளது; எப்போதும் களிப்புடன் இருக்கிறது. களிப்புடனிருக்கும் பண்பைக் குழந்தையினிடம் நான் கற்றுக்கொண்டேன்.

20) ஒரு கன்னிப்பெண்ணின் பெற்றோர் அவளுக்குத் தகுந்த மணமகனைத் தேடச் சென்றிந்தனர். அவர்கள் இல்லாதபோது இன்னொரு சாரார் அவர்கள் வீட்டிற்கு இதே நோக்கத்துடன் பெண்பார்க்க வந்தார்கள். அவளே அவர்களை வரவேற்றாள். நெல்குத்தும் பணியின்பொருட்டு வீட்டின் உட்பக்கம் அவள் சென்றாள். நெல் குத்தும் போது அவளுடைய கைவளையல்கள் 'கலீர் கலீர்' என்று பெரியதாக ஓசையிட்டன. அறிவுள்ள அப்பெண், வளையல்களின் ஓசையால் நானே நெல் குத்துகிறேன் என்றும், பணியாட்களை அமர்த்திக் கொள்ளமுடியாத அளவுக்கு என் குடும்பம் வறுமைப்பட்டுள்ளது என்றும் வந்துள்ளோர் கண்டு கொள்வார்கள். கைக்கு இரண்டிரண்டு வளையல் களைத் தவிர எல்லாவற்றையும் உடைத்து விடுகிறேன் - என்று நினைத்தாள். அவ்வாறே கைக்கு இரண்டிரண்டு வளையல்களைத்தவிர எல்லாவற்றையும் உடைத்தெறிந்தாள், இந்த இரண்டு வளையல்கள்கூடப் பெருஞ்சத்தத்தை உண்டாக்கின. அவள் மேலும் ஒவ்வொரு கையிலும் இருந்த ஒவ்வொரு வளையலை உடைத்தாள். இப்போது அவள் தொடர்ந்து நெல் குத்தியபோதும் சத்தம் எதுவும் உண்டாகவில்லை. அவளுடைய அனுபவத்தை எண்ணிப்பார்த்து நான் பின்வரும் பாடத்தைக் கற்றுக்கொண்டேன். பலர் நடுவே வாழ்வது கருத்து மாறுபாடு, தொல்லை, பிணக்கு,

பூசல் ஆகியவற்றை உண்டாக்கும். இருவர்க்கிடையேகூட அனுவசியமான பேச்சும், சச்சரவும் ஏற்படக் கூடும். துறவி அல்லது சந்நியாசி ஏகாந்தமாகத் தனித்தே இருக்கவேண்டும்.

21) பாம்பு தன் வளையைத் தானே தோண்டிக் கொள்வதில்லை. பிறஉயிரினங்கள் தோண்டிய வளைகளில் அது வாழ்கிறது. அதுபோலவே ஒரு துறவி அல்லது சந்நியாசி தனக்கென ஒரு வீடு கட்டிக்கொள்ளக் கூடாது. குகைகளில் அல்லது பிறர் கட்டிய கோயில்களில் அவர் வாழவேண்டும். பாம்பினிடத்திலிருந்து நான் கற்றுக்கொண்ட பாடம் இது.

22) அம்பைக் கூராக்குபவன் ஒருவனுடைய மனம்முழுதும் ஒருசமயம் அம்பைக் கூராக்குவதிலும் நேராக்குவதிலும் ஈடுபட்டிருந்தது. அவன் அவ்வாறு வேலை செய்துகொண்டிருந்தபோது ஓரரசன் தன் முழுப் பரிவாரங்களுடன் அவன் கடைக்கு முன்னால் கடந்து சென்றான். சிறிது நேரத்திற்குப்பின் ஒருவன் அக்கொல்லனை அணுகி, அரசன் அவனுடைய கடையைக் கடந்து சென்றானா என்று வினவினான். தான் எதையும் பார்க்கவில்லை என்று கொல்லன் விடை தந்தான். உண்மை என்னவெனில், கொல்லனுடைய மனம் அவனுடைய பணியில் தனியே லயித்திருந்ததால், தன் கடைக்கு முன்னால் என்ன நடந்தது என்பதை அவன் அறியவில்லை. மனத்தின் ஆழ்ந்த ஒருமுகத் தன்மையை அவன்பால் நன்கு அறிந்துகொண்டேன்.

23) சிலந்திப் பூச்சி தன் வாயிலிருந்து நீண்ட நூல்களை வெளிப்படுத்தி அவற்றைக் கொண்டு வலைகளைப் பின்னுகிறது. தான் உருவாக்கிய வலையில் தானே சிறைப்படுகிறது. அதுபோலவே ஒரு

வன் தன் எண்ணங்களாகிய வலையைப் பின்னி அதில் தானே சிறைப்படுகிறான். எனவே அறிவுள்ளவன் உலகியல் எண்ணங்கள் எல்லாவற்றையும் தவிர்த்துப் பிரம்மத்தையே சிந்திக்க வேண்டும்.

24) பிருங்கி அல்லது குளவி ஒரு புழுவைப் பிடித்துத் தன் கூட்டில் அதனை இட்டுக் கொட்டுகிறது. பரிதாபத்துக்குரிய அப்புழு குளவியின் வருகையை நினைத்தும் அது தன்னைக் கொட்டுவதை நினைத்தும் எப்போதும் அஞ்சி எந்நேரமும் குளவியையே இடையறாது நினைந்து நினைந்து தானும் குளவியாகவே உருமாறுகிறது. ஒருவன் இடையறாது எவ்வடிவைச் சிந்திக்கின்றானோ அவன் காலப் போக்கில் அவ்வடிவை அடைகின்றான். நினைவின் வண்ணமாக மனிதன் ஆகிறான். நான் ஆத்மனையே எந்நேரமும் இடையறாது சிந்திக்கவும், இவ்வாறு உடற் பற்றுக்கள் அனைத்தையும் நீக்கி மோக்ஷம் அல்லது வீடுபேற்றை அடையவும், குளவியாலும் புழுவாலும் கற்றுக்கொண்டேன்.

தத்தாத்ரேயரின் போதனைகள் அரசனது உள்ளத்தில் ஆழப் பதிந்தன. அவன் உலகைத் துறந்து தன் ஆன்மாவை இடையறாது தொடர்ந்து தியானம் செய்யத் தொடங்கினான்.

தத்தாத்ரேயர் சகிப்புத் தன்மையற்ற நிலையிலிருந்தும், விருப்பு வெறுப்பிலிருந்தும் முற்றிலும் விடுபட்டிருந்தார். ஞானத்தை எங்கிருந்து பெற முடிந்தாலும் அதைக் கற்றுக் கொண்டார். ஞானத்தைத் தேடுவோர் அனைவரும் தத்தாத்ரேயரை வழிகாட்டியாகக் கொண்டு அவரைப் பின்பற்ற வேண்டும்.

---

# படலம் ஏழு

## குருபீடம்: ஆபத்தான ஒரு நோய்

ஜடிலோ முண்டீ லுஞ்சித—கேச
காஷாயம் பர-பஹு்க்ருத-வேஷ:
பஸ்யந் நபி ச ந பஸ்யதி மூடோ
உதர நிமித்தம் பஹு்க்ருத-வேஷ:

**வயிற்றை வளர்ப்பதற்காக மனிதன் எத்தகைய வேஷம் அணிகின்றான்! ஒருவன் தலையில் ஜடையை வளர்க்கிறான்; இன்னொருவன் தலையை மழித்துக் கொள்ளுகிறான். மற்றொருவன் காவியாடை உடுத்திக் கொள்ளுகிறான். மூடன், பார்த்தாலும் பார்ப்பதில்லை.**

— ஸ்ரீ சங்கராச்சாரியார்

அத்வைத தத்துவத்தின் புண்ணிய பூமியும், வாழ்வின் ஒருமைப்பாட்டையும் உள்ளுணர்வின் ஒற்றுமையையும் போதித்த ஸ்ரீ சங்கரர், தத்தாத்ரேயர், வாமதேவர், ஜடபரதர் ஆகியோரைப் பெற்றெடுத்த நாடும் ஆகிய இந்தியாவில் இன்று பிரிவினையாளர்கள் நிறைந்துள்ளனர். அந்தோ! எவ்வளவு பெரிய பரிதாபமான நிலை இது! எவ்வளவு இரங்கத்தக்க நிலையினை இன்று நீங்கள் காணகிறீர்கள்! ஒரு கடற்கரையின் மணலைக் கூட நீங்கள் எண்ணி விடலாம்; ஆனால் இந்தியாவில் இன்று நிலவியுள்ள பல்வேறு மதப் பிரிவுகளை எண்ணுவது முற்றிலும் கடினம். ஏற்கனவே உள்ள பிரிவுகளை இன்னும் பெருக்குவதற்காகக் காளான்களைப் போல் நாள்தோறும் ஏதாவதொரு பிரிவினைக் கொள்கை தலை தூக்குகிறது. தீர்க்க முடியாத பிளவும் பகையுமே எங்கும் மேலோங்கி ஆட்சி செலுத்துகின்றன. பல்வேறு இனங்களிடையே போராட்டம் நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. கருத்து வேறுபாடுகளும் பிளவுகளும்,

நீதிமன்றங்களில் வழக்குகளும், பூசல்களும் கை கலப்புக்களும், இழிவாகப் பழிப்பதும் எங்கும் நிலவுகின்றன. அமைதியோ ஒற்றுமையோ எங்கும் இல்லை. தெருக்களிலும் சந்தைகளிலும் ஒரு குருவின் சீடர்கள் மற்றொரு குருவின் சீடர்களுடன் சச்சர விடுகின்றனர்.

## குருக்களைப்போல் நடிக்கும் யோகக் கற்றுக்குட்டிகள்

ஆர்மோனியத்தில் சிறிது பயிற்சியும் சிறிது பேச்சுவன்மையும் உள்ள இளைஞன் இரண்டே ஆண்டுகளில் மேடையேறி ஒரு குருவைப் போல் அல்லது ஆசாரியனைப் போல் நடித்துக் குப்பையான சிறு வெளியீடுகள் சிலவும், பாடல்கள் சிலவும் வெளியிட்டுத் தனக்கென ஒரு பிரிவை ஏற்படுத்து கிறான். இந்தியாவில் ஆழ்ந்த மூடத்தனம் இன்னும் நிறைந்துள்ளது; யாரும் தனக்கெனச் சீடர்களை வெகு விரைவில் ஏற்படுத்திக்கொள்ள முடியும்.

மற்றோர் இளைஞன் ஆசனங்கள், மூச்சை நிறுத்தல், பிராணாயாமம் ஆகியவற்றில் சிறிது பயிற்சி பெற்றதும், நாற்பது நாட்களுக்கான உணவுகள் இரகசியமாக மறைத்து வைக்கப்பெற்ற, நிலத்தின் கீழ் உள்ள அறை ஒன்றில் அமர்ந்து தன்னை மூடிக் கொள்ளுகிறான். தாகத்தையும் பசியையும் சில நாட்கள் வரை தணிக்கக் கூடிய சில வேர்களை அவன் உட்கொள்ளுகிறான். நிலவறை யில் அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! அவன் அங்கு உறங்குகிறான். சமாதியில் இருந்ததாகப் பாசாங்கு செய்து கொண்டு அவன் வெளியில் வருகிறான். பொறுமையை (திதிக்ஷை)ச் சிறிது காலம் பயின்ற பயிற்சியே இது. அவனுடைய

சம்ஸ்காரங்களும், வாசனைகளும் அழிக்கப்படவே இல்லை. அவன் முன்பு போல், உலகியல் பேர்வழி தான். பொருள் சேர்க்க அவன் இங்கும் அங்கும் முயல்கிறான்; சீடர்களையும் சேர்க்கிறான். குரு யோகி ஒருவர் போல் அவன் நடிக்கிறான். அறி வில்லாத பாமர மக்கள் எளிதில் ஏமாறுகிறார்கள். வருந்தத் தக்க செய்தி என்னவெனில், பொறுப் புணர்ச்சி இல்லாத, போலியான, இத்தகைய இளைஞர்களின் முட்டாள் தனமான செயல்களால், உண்மையான சமாதியில் இருக்கின்ற, உண்மை யான யோகிகளின் இடத்திலும் மக்கள் தாங்கள் கொண்டிருந்த நம்பிக்கையை இழக்கின்றார்கள். இந்த இளைஞர்கள் ஆன்மீக வாழ்வு, யோகம் ஆகியவற்றின் ஆழத்தைப் புரிந்து கொள்ளவில்லை. சமாதி என்பது நிச்சயமாகப் பொதுச் சாலைகளில் செய்து காட்டுவதற்காக ஏற்பட்டதன்று. சமாதி என்பது இந்திர ஜாலமோ வித்தை காட்டுவதோ அல்ல. இவ்வாறு ஏமாற்றுவது ஒரு தொத்து நோயாகி விட்டது; இளைஞர் பலர் இத்தகைய வேஷத்தை அல்லது விளையாட்டைத் தொடங்கி யுள்ளனர்.

இத்தகைய யோகக் கற்றுக்குட்டிகளைப் பற்றி எச்சரிக்கையாக இருங்கள். இவர்கள் பகல் வேஷக் காரர்கள்; அல்லது போலியான குருக்கள்; சமூகத் திற்குச் சுமையாக இருக்கின்ற ஆபத்தான போலி கள்; புல்லுருவிகள்; நாட்டுக்குக் கேடு விளைவிப் பவர்கள்; அறிவில்லாத மூட நம்பிக்கை மிகுந்தவர் களின் சொத்துக்களை விழுங்குகின்ற வல்லூறுகள்.

தம் வயதான காலத்தில் பயன்படட்டும் என்று கருதிச் சிலர் சீடர்களை ஏற்படுத்திக் கொள்ளுகிறார் கள். சீடர்களின் வளர்ச்சியைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை.

## மகளிர்க்கு ஓர் எச்சரிக்கை

இப்பேர்ப்பட்ட குருக்களாலும் ஆசாரியர்களாலும் பெண்கள் மிக எளிதில் ஏமாற்றப் படுகிறார்கள். பெண்கள் மென்மை மனமும் மூட நம்பிக்கையும் மிகுந்தவர்கள். இனிமையான இசையும் பாட்டும் அவர்களை மிக எளிதில் கவர்ச்சி கொள்கின்றன. இசை ஓசைகளுக்கு அவர்கள் சுலபமாகப் பலியாகிறார்கள். இத்தகைய குருமார்கள் பெண்களின் கூட்டத்தில் செல்வாக்கைப் பெற முயல்கின்றனர். அவர்கள் எளிதில் அக்கூட்டத்தில் செல்வாக்கைப் பெற்றுச் சிரமமின்றித் தாங்கள் விரும்பியதைப் பெறுகின்றனர். அவர்கள் அக் கூட்டத்தாரைத் தங்களின் கருவிகளாகவும் பகடைகளாகவும் பயன்படுத்துகின்றனர். அவர்கள் அக் கூட்டத்தாரைச் சுரண்டித் தங்கள் வயிறுகளை நிரப்பிக்கொண்டு பட்டாடை உடுத்திக் கொண்டு உயர்ந்த காலணிகளை அணிந்து கொண்டு திரிகின்றனர். மகளிரைச் சீடர்களாகக் கொள்ளுமாறு வேதங்கள் இல்லறத்தாருக்கும் சிறிதும் அனுமதி தரவில்லை. கணிசமான சம்பாத்தியத்தின் பொருட்டு மகளிரைச் சீடர்களாகக் கொள்வோர் மலத்தில் நெளியும் புழுக்களாவர். இந்தக் கபடதாரிகளுக்குப் பிராயச் சித்தமே கிடையாது. ரௌரவ, மகா ரௌரவ நரகங்களில் அவர்கள் இரக்கமின்றித் தள்ளப் படுகிறார்கள்.

ஓ! தேவிமார்களே! இனியேனும் விழிப்படையுங்கள். கண் திறந்து பாருங்கள். நீங்களனைவரும் படித்தவர்கள். உங்கள் பகுத்தறிவைப் பயன் படுத்துங்கள். வெறும் சொற்பொழிவாலும் பாட்டாலும் ஏமாற வேண்டாம். போலிக் குருமார்களைப் பற்றி எச்சரிக்கையாக இருங்கள். இல்லறத்தில் இருப்பவரை உங்கள் குருவாக எப்போதும்

ஏற்றுக்கொள்ள வேண்டாம். அவரிடம் தீக்ஷையும் பெற வேண்டாம். அப்படிச் செய்தால் முடிவில் நீங்கள் அழவேண்டி நேரும்; தீங்கான பலனை அனுபவிக்க வேண்டியும் வரும். நீங்கள் தேர்ந் தெடுக்கும் குரு அப்பழுக்கில்லாத, முன் உதாரண மாக விளங்கக் கூடிய ஒழுக்க சீலராக இருக்க வேண்டும். அவர் முற்றிலும் தன்னலமற்றவராக வும், பேராசை, காமம் ஆகியவற்றிலிருந்து முற் றிலும் விடுபட்டவராகவும் இருக்க வேண்டும். எல்லா வகையான உலகியல் கறைகளிலிருந்தும் அவர் விடுபட்டவராக இருக்க வேண்டும். வேதங் களையும், சாஸ்திரங்களையும் ஆழ்ந்து பயின்ற அறி வுள்ளவராக அவர் இருக்க வேண்டும். உங்களை உயர்த்தி ஆன்மீக நெறியில் அழைத்துச் செல்லக் கூடிய ஆன்மீக உள் வலிமையும் மெய்யுணர்வும் உள்ளவராக அவர் இருத்தல் அவசியம்.

## சமயப் பிரிவுகள், கொள்கைகள் ஆகியவற்றின் தொல்லை

சைதன்ய பிரபு, குரு நானக், தயானந்த சுவாமி ஆகியோர் அனைவரும் பரந்த மனப்பான்மை உள்ள உயர்ந்த பெரியவர்கள். அவர்களுடைய போதனைகளனைத்தும் அகில உலகுக்கும் உரியவை; உயர்ந்தவை. தங்கள் சொந்த மதப்பிரிவுகளையோ கொள்கைகளையோ நிலைநாட்ட அவர்கள் ஒரு போதும் விரும்பியதில்லை. இன்று அவர்கள் உயி ருடனிருப்பின், தங்கள் சீடர்களின் செயல்களைக் குறித்துக் கண்ணீர் சிந்துவர். ஆழ்ந்த தவறுகளை யும் குற்றங்களையும் இழைப்போர் சீடர்களேயாவர். பரந்த மனப்பான்மையை அவர்கள் வளர்த்துக் கொள்ளவில்லை. அவர்கள் குறுகிய மனப்பான்மை உள்ளவர்கள். பிளவுகள், குழுக்களாகப் பிரிதல்,

இன்னும் எல்லா வகையான தொல்லைகளையும், அவர்கள் உருவாக்குகின்றனர்.

ஆன்மீக குரு ஒருவர் தம் சொந்த மதப்பிரிவை ஒருபோதும் ஏற்படுத்தக் கூடாது. நீண்ட வருங் கால உள்நோக்குள்ளவராக அவர் இருக்க வேண் டும். தனி மதப்பிரிவைத் தோற்றுவித்தல் என்பது உலக அமைதியை நிலை குலைக்கும் ஒரு போர்க் களத்தை உருவாக்குவதே யாகும். நாட்டுக்கு அவர் நன்மையை விடத் தீங்கையே மிகுதியும் செய்கிறார். பிற மதங்களின் கருத்துக்கள், கொள் கைகள் ஆகியவற்றுடன் முரண் படாதனவாய், அகில உலகில் உள்ளோரனைவரும் ஏற்கத் தக்கன வாய், பின்பற்றத் தக்கனவாய்ப் பரந்த மனப் பான்மையுடன் கூடிய அகில உலகக் கருத்துக்களை யும் கொள்கைகளையும் கொண்ட ஒரு மத நிறுவனத்தை அவர் நிறுவலாம்.

## உண்மையான குருவின் இயல்புகள்

உண்மையான குருவின் இயல்புகளைப் பார்ப் போம். பின்வரும் தகுதிகள் உள்ள ஒருவரை நீங்கள் பார்த்தால் உடனே அவரை உங்கள் குரு வாக ஏற்றுக் கொள்ளுங்கள். பிரம்ம ஞானமும் பிரம்ம நிஷ்டையும் உள்ளவரே உண்மையான குரு. வேதங்களைப் பற்றியும் தன் ஆன்மாவைப் பற்றியும் நிறைந்த அறிவுள்ளவர் அவர். சாதகர்களின் ஐயங் களை அவர் அகற்றக் கூடியவர். சம நோக்கும், சம நிலை மனப்பான்மையும் உள்ளவர் அவர். ராகத்வேஷம், மகிழ்ச்சி, சோகம், ஆணவம், வெகுளி, காமம், ஆசை, மோகம், கர்வம் முதலியவற்றிலிருந்து விடுபட்டவர் அவர். அவர் ஒரு கருணைக்கடல். அவர் முன்னிலையில் சென்றாலே ஒருவர் அமைதியும் மன எழுச்சியும் பெறுகின்றார்.

அவர் முன்னிலையில் நின்றாலே சாதகர்களின் ஐயங்கள் அனைத்தும் நீங்கி விடுகின்றன. அவர் யாரிடத்தும் எதுவும் எதிர்பார்ப்பதில்லை. பின்பற்றத்தக்க ஒழுக்கம் உள்ளவர் அவர். நிறை மகிழ்வும் பேரின்பமும் அவர்பால் உள்ளன. அவர் உண்மையான சாதகர்களைத் தேடிக்கொண்டிருக்கின்றார்.

குருவின் பாத தாமரைகளுக்குப் பணிவான வணக்கங்கள். உண்மையான குருவினிடம் நான் முழு நம்பிக்கை கொண்டுள்ளேன். குருவைப் பெரிதும் வழுத்துகின்றேன். என்றென்றும் அவருடைய பாதகமலங்கட்குப் பணிவிடை செய்ய என் இதயம் ஏங்குகின்றது. மனத்தின் மாசுகளைப் போக்குவதற்குக் குருசேவையைக் காட்டிலும் சக்தி வாய்ந்த தூய்மைச் சாதனம் வேறெதுவும் இல்லை என்று நம்புகின்றேன். குருவின் கூட்டுறவுதான் அமரத்துவத்தின் மறுகரைக்கு நம்மைக் கொண்டு போய்ச் சேர்க்கும் பாதுகாப்பான ஒரே ஓடம் என்று நான் முழுமையாக நம்புகின்றேன்.

## வியாபார நோக்குள்ள குருபீடம்

ஆனால், வியாபார நோக்குள்ள குருபீடங்களை நான் விரும்பவில்லை. குருமார்களாகவும் ஆசாரியர்களாகவும் நடித்துச் சீடர்களைச் சேர்த்துப் பொருள் திரட்டும் கபடதாரிகளின் செயல்களை நான் மிகவும் வெறுக்கின்றேன். என்னுடைய இக்கருத்தை நீங்களனைவரும் ஒப்புக்கொள்ளுவீர்கள். இவ்வகையில் இரண்டுபட்ட அபிப்பிராயங்கள் இருக்க இயலாது. அவர்கள் சமூகத்திற்குப் பீடைகளாக வாய்த்துள்ளனர். குருபீடம் வெறும் வியாபாரமாக ஆகிவிட்டது. இந்திய மண்ணிலிருந்து அது அறவே அகற்றப்படுதல் மிகவும் அத்தியாவசியம்.

அது இந்திய மக்களுக்குப் பெரும் நாசத்தையும் தொல்லையையும் உண்டாக்குகின்றது. மேனாட்டாரை யுள்ளிட்ட பல்வேறு நாட்டு மக்களின் உள்ளங்களில் அது தவறான அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொண்டிருங்கிறது. இந்தக் குருபீட வியாபாரத்தின் காரணமாக இந்தியா தன் ஆன்மீகப் பெருமையை இழந்து வருகின்றது. இந்த ஆபத்தான நோயைக் களைந்தெறியவும் வேருடன் அழிக்கவும் உடனே கடுமையான நடவடிக்கைகளை எடுத்தாகவேண்டும். இதை நீக்குவதில் சாத்திய மான வழி எதுவும் விடுபடக் கூடாது. தற்போது அது பயங்கரமான வடிவை அடைந்துள்ளது. அது ஒரு பெரிய தொத்து நோயாக ஆகிவிட்டது. கணிச மான சம்பாத்தியத்துக்கு எளியதொரு வழியாகப் பெரும்பாலோர் இக் குருபீட வியாபாரத்தைத் தொடங்கியுள்ளனர். அறிவற்ற அப்பாவி மகளிரும் ஆடவரும் இந்தப் போலிக் குருமார்களால் மிகப் பெரும் அளவில் சுரண்டப் படுகின்றனர். எவ்வளவு அவமானம் இது !

குருமார்கள் பலர் இங்கும் அங்கும் திரிகின்றனர். அவர்கள் சொற்பொழிவாற்று கிறார்கள், கலந்துரையாடல்களை நடத்துகிறார்கள். அவர்கள் கீதையையும் பிரம்ம சூத்திரங்களையும் மனப்பாடம் செய்துள்ளனர்; ஆனால் அவர்கள் ஆய்ந்தறிவதில்லை; தியானம் செய்வதில்லை. அவர்கள் எளிதில் எரிச்சல் அடைகிறார்கள். அவர்களுடைய அபிமானம் மிகவும் தடித்துள்ளது. சாதுத் தன்மையும் தெய்வீக இயல்புகளும் அவர் களிடம் இல்லை. சேவை செய்யும் மனப்பான்மை அவர்களிடம் இல்லை. சேவை செய்வதைப்பற்றியும் கீர்த்தனங்கள் பாடுவதுபற்றியும் அவர்கள் இகழ் வாகப் பேசுகிறார்கள். மக்கள் பலரை அவர்கள் திடமாகப் பிடித்துக்கொள்கிறார்கள். அம்மக்களின்

முதுகில் தங்கள் கைகளைவைத்து அவர்கள் ஆசி வழங்குகிறார்கள். ஆனால் அவர்கள் ஒருவரைக்கூட இங்கிருந்து கடந்து இறுதிநிலையான முக்திக்கோ பேரின்பத்திற்கோ செல்லுமாறு அனுப்ப முடிய வில்லை.

சித்துக்கள் சில செய்து காட்டினால் தான் பொதுமக்கள் ஒருவரைக் குருவாகக் கருதுகிறார் கள். இது மிகவும் தவறு. அவர்கள் மிகுந்த மூட நம்பிக்கை உள்ளவர்களாக இருக்கக் கூடாது. இத்தகைய யோகக் கற்றுக்குட்டிகளிடம் அவர்கள் மிக எளிதில் ஏமாறுவார்கள். அவர்கள் தங்கள் பகுத்தறிவையும் ஆராய்ச்சியையும் பயன்படுத்த வேண்டும். அவர்கள் எவ்வகையான முடிவுக்கும் வருவதற்கு முன்பு, குருவின் போக்குகள், பழக்கங் கள், இயல்பு, நடத்தை, விருத்தி, சுபாவம் முதலியவற்றைக் கூர்ந்து கவனித்து, வேதங்களில் அவர் பெற்றுள்ள அறிவைச் சோதித்துப் பார்க்க வேண்டும்.

தவறாக வழிகாட்டி இந்த நாட்டின் மக்களைப் படுகுழியில் தள்ளும் இத்தகைய போலிகளை அணுகுவதைக் காட்டிலும், உங்கள் உள்ளத்தில் குடிகொண்டுள்ள தெய்வங்களாகிய கண்ணன், இராமன் அல்லது சிவபெருமானைக் குருவாகக் கொண்டு அவருக்குரிய மந்திரத்தை ஜெபிப்பது நல்லது.

ஸ்ரீ சங்கரர் அல்லது ஸ்ரீ தத்தாத்ரேயாரைப் போன்ற உண்மையான குருமார்கள் பெருமை வாய்ந்த இந்தியாவில் பெருகட்டும். போலிக் குருமார்களிடமிருந்தும், தானே கடுமையான சாபத் தீடாக இருக்கும் குருபீடத்திலிருந்தும் இந்தியா முற்றிலும் விடுபடட்டும். அகில உலகுக்

கும் உரிய சனாதன தர்மக் கொள்கைகள் உலகில் பரவட்டும். பல்வேறு வகையான மதப் பிரிவுகளை யும் கொள்கைகளையும் ஒன்றுபடுத்த ஆன்மீகத் தலைவர்கள் தங்களால் முடிந்த அளவு முயலட்டும். அவர்கள் புதிய கொள்கைகளை ஏற்படுத்தாமல் இருக்கட்டும். மதப் பிரிவும் போராட்டமும் சச்சர வும் இனி எப்போதும் எழாமல் முடிவடையட்டும். தியாகம், துறவு, மெய்யுணர்வு ஆகியவற்றை இலட்சியங்களாகக் கொண்ட ஞானிகள், தீர்க்க தரிசிகள், யோகிகள், பக்தர்கள், துறவிகள் ஆகிய வர்கள் நிரம்பிய ஆன்மீக நாட்டுக்குரிய பெருமை யையும் புகழையும் இந்நாடு எப்போதும் பாது காத்து வரட்டும். உலகெங்கும் ஒற்றுமை, அமைதி, நட்பு நிலவட்டும். நம் அனைவர் மீதும் குருமார் களின் நல்லாசிகள் பொழியட்டும். ஆன்மீக நெறி யில் அவர்கள் நம்மை வழிநடத்திச் செல்லட்டும்.



# படலம் எட்டு

## துறவிகட்கு ஒரு வார்த்தை

ஆபாத வைராக்யவதோ முமுக்ஷூன்
பவாப்தி பாரம் ப்ரதியாது முத்யதான்
ஆசாக்ரஹோ மஜ்ஜயதேந்தராலே
நிக்ருஹ்ய கண்டே விநிவ்ருத்ய வேகாத்.

— வெறுந் தோற்றத் தளவில் பற்று நீங்கியவர்களாய், எல்லைக்குட்பட்ட வாழ்க்கை அல்லது சம்சார சாகரத்தைக் கடக்க முயல்பவர்களாய் இருக்கின்ற முக்தி நாடுவோரை ஆசை என்னும் சுறுமீன் பிடித்துக் கழுத்தைக் கவ்விக் கொண்டு நடுக் கடலுக்கு வேகமாக இழுத்துச் சென்று மூழ்கடித்து விடுகின்றது.

— விவேக சூடாமணி

ஹரி ஓம் ! இறைவா ! போற்றி ! போற்றி ! ஸ்ரீ சங்கரர், மகாத்மாக்கள், துறவிகள் ஆகியோர்க்குப் பணிவான வணக்கங்கள்.

தேக அத்தியாசம் (உடல் எண்ணம்), தன்னலம், வாசனைகள், அகம்பாவம், அபிமானம் ஆகியவற்றைத் துறந்தவனே (நியாசம்) துறவி. நான்முகக் கடவுளின் நான்கு குமாரர்கள் (ஸ்ரீ சனகர், சனந்தனர், சனத் குமாரர், சனத் சுஜாதர்), ஸ்ரீ தத்தாத்ரேயர், ஸ்ரீ சங்கரர் ஆகியோர் தனி நிவிருத்தி மார்க்கம் என்னும் பாதையின் முன்னோடிகள். துறவிகளின் வரிசைக்கு அவர்கள் முன்னோர்கள்.

### காலங்களின் போக்கு

பொருளாதார, இன, சமுதாய, அரசியல், உளவியல், தொழில் முன்னேற்றங்களோடு ஆன்மீக

முன்னேற்றம் ஒரு போதும் புறக்கணிக்கப்படக் கூடாது. அதுவே ஆதாரம். ஆதியும் அந்தமும் அதுவே. இக்காலத்தில் கர்மயோகத் துறையின் தலைவர்கள் கர்மத்தையே வலியுறுத்துகிறார்கள். வாழ்வின் ஆன்மீகப் பக்கத்தை அவர்கள் முற்றிலும் புறக்கணித்துள்ளனர். பல்வேறு நிறுவனங்களைச் சேர்ந்த துறவிகள் கூடச் சமூக சேவையை மட்டும் செய்கின்றனர். சில துறவிகள் ஆழ்ந்த கல்வி ஞானத்தை மட்டும் பெற்றுள்ளனர்; அவர்கள் சில காலத்திற்குச் சிறிதளவு செல்வாக்குள்ளவராக இருக்கிறார்கள். அவர்கள்கூட வாழ்வில் தியானப் பகுதியைத் தேவையற்றதென உதறி விட்டனர். பொது மக்கள் மனத்தில் உண்மையான நிலையான கருத்தை அவர்களால் தோற்றுவிக்க முடியவில்லை; ஏனெனில் அவர்கள் தங்களுக்குப் பக்க பலமாக உள்ளார்ந்த ஆன்மீக பலத்தை அல்லது உண்மை யான ஆன்மீக நிறைவைப் பெறவில்லை.

ஆன்மீகப் பெரியவர்கள், யோகிகள், ஞானி கள், துறவிகள் பொது மேடையில் வால் நட்சத் திரம் போல் அல்லது நவம்பர் (கார்த்திகை) மாத இரண்டாம் நாள் பிறை போல் தோற்றம் தர வேண்டும்; ஏசுநாதரைப் போல் சிறிது காலத்திற் குத் தங்கள் சக்தியைப் பொழிந்து மகத்தான பணியை நிறைவேற்றி விட்டு உடனே அங்கிருந்து மறைந்துவிட வேண்டும். நீண்ட காலம் வரை ஆன்மீக வகுப்புக்களை நடத்துவதும், ஆசிரமங்களைத் தொடங்குவதும் இளம் துறவிகட்குரிய செயல். இது பேரொளி வீசும் ஆன்மீக அசுர பலம் வாய்ந்த வர்களின் சுபாவத்திற்குப் பொருந்தாது. கங்கை யாறு ஓராண்டில் நான்கு மாதத்தில் செய்யும் பணியைப் போல் அவர்கள் வெகு விரைவில் நாட் டில் ஆன்மீக வெள்ளப் பெருக்கு எடுத்தோடச் செய்வார்கள் அல்லது அமரத்துவ அமிர்தத்தை

(தெய்வ ஞானத்தை) நாடெங்கும் பொழியச் செய்வார்கள்.

## வசதிகள் மிகுந்த வாழ்வின் மயக்கம்

துறவியோ அல்லது இல்லற வாசியோ யாரும் வசதிகள் மிகுந்த வாழ்வின் பொருட்டு ஓர் ஆசிர மத்தைத் தொடங்கலாகாது. துறவிகள் பலரும் தாங்கள் ஆசிரமத்தைத் தொடங்கும் புதிதில், அதாவது அவர்கள் ஏழைகளாக இருக்கும்போது தூயவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் செல்வர் களாக வளர்ந்த பின் தங்களுக்குப் போதிய பக்தர் களும், பாராட்டுவோர்களும் இருக்கும் போது, அவர்களின் உள்ளத்தில் தன்னல நோக்கங்கள் இடம்பெற்றுத், தன்னலமற்ற சேவை செய்யும் ஆர்வம் படிப்படியாகத் தேய்ந்து போகின்றது. ஆசிரமத்தைத் தொடங்கியதன் நோக்கம் தோல்வி யடைகிறது. பின்னர் அது வருவாய் பெருக்கும் நிறுவனமாக மாறிவிடுகின்றது. மக்களுக்கு ஈடு பாடு ஏற்படுவதில்லை. நிறுவனத்தின் தலைவர் முற்றிலும் துறவு பூண்டவராய் வைராக்கியம் மிகுந்த வாழ்க்கை நடத்தினால் அந்த ஆசிரமம் என்றென்றும் அமைதியும் இன்பமும் மகிழ்வும் நிலவும் இடமாக அல்லது ஆதாரமாக நிலைபெறு கின்றது. கோடிக்கணக்கான மக்களை அது ஈர்க் கின்றது. ஆன்மீக வல்லவர்கள் தலைவர்களாக இருக்கின்ற ஆசிரமங்கள் உலகத்திற்கு எப்போதும் தேவையாக இருக்கின்றன.

இளந்துறவிகள் சிலர் தொடர்ந்து சில காலத் திற்கு எட்டிக்காய் விதைகளை உண்ணத் தொடங்கி இரண்டாண்டுகளில் நூற்றிருபது விதைகளை விழுங்கி, மூன்றாண்டுகள் லகு சித்தாந்த கௌமுதி யும் நியாயமும் பயின்று, உண்மையான சித்தர்

களாகத் தாங்கள் ஆகிவிட்டதாகக் கற்பனை செய்து கொண்டு, உலகியல் நாட்டங் கொண்டவர்களோடு தாராளமாகக் க ல ந் து பழகுகின்றனர்கள். இது மிகவும் கடுமையான த வ று கு ம். எட்டிக்காய் விதை மலட்டுத் தன்மையை உண்டாக்குகின்றது. மலட்டுத்தன்மை பிரம்மச்சரியத்தை நிலை நாட்டி யதாக ஆகாது. அவர்கள் விரைவில் வீ ழ் ச் சி யடைவார்கள். சொல்லாமல் இது நடைபெறு கின்றது. நிறை நிலை பெற்ற ஞானிகளும் முழு வளர்ச்சி பெற்ற யோகிகளும் கூட மிகவும் எச்சரிக் கையாக இருக்க வேண்டும். அவர்கள் உலகியல் நாட்டங் கொண்டவர்களோடு கண்மூடித் தனமாக வும் கட்டுப்பாடில்லாமலும் கலந்து பழகுவதைத் தவிர்க்க வேண்டும். மீன்கள் ஆணும் பெண்ணு மாக உறவாடும் காட்சி, முன்னேற்றம் பெற்ற முனிவர் ஒருவரைக் காம உணர்ச்சி பெறச் செய் தது. 'கலீர்' என்று ஒலிக்கும் பெண்ணின் கை வளையல்கள், கரையழகு பெற்ற அல்லது நிற அழகு பெற்ற ஆடைகள், ம ன த் தி ல் ஆழ்ந்த காமக் கிளர்ச்சியைத் தோற்றுவிக்கின்றன. அ வ ர் க ள் தமக்கே உரிய களங்கம் மிகுந்த கூட்டுறவுகளைப் பெற்றுள்ளனர். மோகம் மிகவும் சக்தி வாய்ந்தது. மாயை மர்மம் மிகுந்தது. சாதகர்களே ! எச்சரிக் கையாக இருங்கள்!

கட்டுப்பாடற்ற இளஞ் சாதகர்களை நாக்கும் உணவுச் சுவையும் நெறி வழுவச் செய்கின்றன. பிரம்மச்சாரிகளும் துறவிகளும் சத் சங்கம் செய்தல் என்ற போர்வையில் இல்லறவாசிகளுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொள்ளுகின்றனர். சாதகர் களே! நாச்சுவையை நிறைவேற்றிக் கொள்ளவா நீங்கள் உங்கள் பெற்றோர்களையும் பதவிகளையும் சொத்துக்களையும் துறந்து துறவு பூண்டீர்கள் ? அல்லது மெய்யுணர்வு பெறுவதற்கா ? முன்னர்க்

குறிப்பிட்ட காரணத்திற்காகவென்முல் நீங்கள் உலகில் பொருளீட்டுவதால் நன்கு அனுபவித்திருக் கலாம். துறவிகளின் வரிசைக்குக் களங்கத்தை உண்டாக்காதீர்கள். நாச்சுவையை வெல்ல முடியா விட்டால் காவியாடையைக் களைந்தெறிந்து விட்டு உலகியலுக்குத் திரும்புங்கள்; ஏதேனும் வேலை செய்து பொருள் ஈட்டுங்கள். கர்ம யோகத்தின் வாயிலாக வளர்ச்சி பெறுங்கள். நாச்சுவையை வெல்லாமல் மனத்தை வெல்ல இயலாது.

## இதுவா சத் சங்கம்?

சத் சங்கம் இக்காலத்தில் இழிநிலை அடைந் துள்ளது. மனத்துக்குத் தெம்பூட்டும் அல்லது மகிழ்ச்சியூட்டும் பொழுது போக்காகத் தேய்ந் துள்ளது. துறவிகளுக்கும் இல்லற வாசிகளுக்கும் இடையே மாலையில் ஒருமணி நேரம் வறட்டு வேதாந்தப் பேச்சும் சோம்பேறித் தனமான உலகியல் பேச்சும், சிறிது அரசியல், சிறிது பிறரைப் பழித்தல், புறங்கூறல்; கேலிச் சிரிப்பு, வெடிச் சிரிப்பு, கீழ்த்தரமான பேச்சு, மட்டமான அளவில் உணர்ச்சிகளைக் கொட்டுவது ஆகியவற்றைக் கலந்து பேசுவதே சத்சங்கம் என்ற பெயரைப் பெறு கின்றது. சத்சங்கம் செய்யும் துறவியின் எண்ணங் களும், கேட்பவர்களின் மனங்களும் பல ஆண்டுகள் சத்சங்கம் செய்த பின்னும் ஒரே நிலையில் உள்ளன. ஆன்மீக முன்னேற்றமும் வளர்ச்சியும் ஏற்படுவ தில்லை.

சாதுக்களும் சந்நியாசிகளும் உலகில் உலவும் போது அவர்கள் இல்லறவாசிகளுக்கு வைராக்கிய வாழ்வின் எடுத்துக்காட்டாகத் திகழ வேண்டும். உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத தேவைகளை மட்டுமே அவர்கள் இல்லறத்தாரிடமிருந்து பெற

வேண்டும். மிகவும் தாராளமாக அவர்களுடன் கலந்து பழகக் கூடாது. கிராமத்திற்கு அல்லது நகருக்கும் புறம்பே உள்ள தனியிடத்தில்தான் அவர்கள் வசிக்க வேண்டும். கண்டிப்பான முறையில் அவர்கள் ஆன்மீக வகுப்புக்களை நடத்த வேண்டும். இடைவேளையின் போது அவர்கள் உலகியல் செய்திகளைப் பேசக் கூடாது. சிரிப்பை மூட்டும் அளவுக்குப் பல்வேறு கதைகள் மிகுதியும் அவர்கள் பேச்சில் இடம் பெறலாகாது. அவர்கள் சிரிப்பு வெடிகளை வெடிக்கக் கூடாது. அங்கு ஆழ்ந்த அமைதி நிலவவேண்டும். அவையில் உள்ள கூட்டம் முழுதும் கவரப்பட்டுச் செயலற்று இருக்க வேண்டும். குண்டூசி விழுந்தாலும் கேட்கக் கூடிய அளவு நிசப்தம் நிலவ வேண்டும். அப்போதுதான் இல்லறவாசிகள் கவரப்படுவார்கள். சத் சங்கத்திலிருந்து சிறிதேனும் நன்மை பெற்றதாக அவர்கள் உணர்வார்கள்.

## பால் ரொட்டிப் பறவைகள்

இல்லற வாசிகளிடம் அடிக்கடி பல்வேறு பொருள்களை ஒரு துறவி கேட்கத் தொடங்கும் அக்கணத்திலேயே தன் நன்மதிப்பையும் செல்வாக்கையும் இழந்து விடுகிறுன். அவ்விடத்தை விட்டு உடனடியாக வெளியேறுமாறு அவன் கட்டாயப் படுத்தப்படுகிறுன். வெட்கங்கெட்ட சில துறவிகள் மாதக் கணக்கில் இல்லறவாசிகளிடையே புல்லுருவிகளாக வாழ்கிறுர்கள். அவர்கள் ‘பால் ரொட்டிப் பறவைகள்’! அவர்கள் உண்மையான துறவிகள் அல்லர். இனி, மக்கள் எண்ணிக்கைக் கணிப்பின் அறிக்கை தரப்படும் போது தங்கள் அறிக்கைகளை மேலிடத்திற்கு அனுப்புவதில் அதிகாரிகள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். இத்தகையோர் சாதுக்கள், துறவிகள் என்ற வகையில் இடம் பெறக்

கூடாது. ஆட்டின் தோலைப் போர்த்த ஓநாய்போல் அவர்கள் காவி யாடை அணிந்த தொழிற் பிச்சைக் காரர்கள். உண்மையான துறவிகளைப்பற்றிய நேர்மையான பதிவேடு இருக்கவேண்டும். சாதுக் களின் எண்ணிக்கையைப் பெருக்கி 74 லக்ஷம் சாதுக்கள் என்று எண்ணிக்கை காட்டுவதனுல் என்ன பயன் உள்ளது? தங்களுக்கும், பெரும் அளவில் நாட்டுக்கும் பயனுள்ள நல்ல பண்பட்ட சாதுக்கள் 2000 பேருக்குமேல் நீங்கள் காண முடியாது. உண்மையான சாது அல்லது துறவி பெருமைவாய்ந்த கதிரவனைப் போன்றவர். அல்லும் பகலும் அவர் ஒளியுடன் திகழ்கின்முர்.

## சாதகர்கட்குப் பயிற்சி

சாதுக்களுக்கும், சந்நியாசிகளுக்கும் ரிஷிகேசம் தான் மிகவும் பொருத்தமான இடம். இலவசமாக உணவு, உறையுள், குடில்கள் கிடைக்கின்றன. அழகான நூலகம் உள்ளது. மருத்துவ உதவி கிடைக்கும். பறவைபோல் நீங்கள் சுதந்திரமாக இருக்கலாம். பின், இங்கும் அங்கும் ஏன் அலைகிறீர் கள்? ஒரு சாது அல்லது துறவி அல்லது சாதகர் ஆன்மீக முன்னேற்றத்தையும் மெய்யுணர்வையும் அடைய உண்மையாக விரும்பினுல் அவர் இந்த இடத்தில் நிலையாகத் தங்கி, ஒருநாள்கூட வெளி யில் செல்லாமல், குறைந்தபட்சம் பன்னிரண்டு ஆண்டுகள் கடுமையான உறுதியான சாதனை புரிய வேண்டும். இடமாறுதல் தேவையற்றது. கங்கை யும் இமயமும் என்றென்றும் கிளர்ச்சியும், வளர்ச்சியும், உடல் நலமும் தருகின்றன. பலவீனமான மனதும் தவருன நம்பிக்கையும் உள்ள டாக்டர்களும் பணக்காரர்களும் கொண் டுள்ள அறிவில்லாத கற்பனையே இடம் விட்டு இடம் மாறுதலாகும்.

ஒரு சாது அல்லது துறவி ஊர் ஊராகச் சென்று மேடைப் பேச்சுக்களை வழங்குவதைக் காட்டிலும் மிகுதியான உருப்படியான பணியைத் தன் குடிசை வாசலிலேயே செய்ய முடியும். பூ மலரும்போது வண்டுகளுக்கு வரச்சொல்லி அழைப்பு அனுப்புவதில்லை. வண்டுகள் தாமாகவே வருகின்றன. அது போலவே உண்மையான மெய்யுணர்வு நாட்டம் கொண்டவர்கள் உண்மையான துறவி இருக்கும் இடத்திற்குத் தாமாகவே திரண்டு வருவார்கள். துறவிகள் எங்கும் செல்லவேண்டியது மில்லை; விளம்பரம் செய்யவேண்டியதுமில்லை. மேடைப் பேச்சுக்களின் பயன் அரைமணி நேரத்திற்கான தற்காலிகமான கிளர்ச்சிதான். கூட்டத்தில் சிற்சில மூலைமுடுக்குகளிலிருந்து இரைச்சல், பூசல், சச்சரவு, கைதட்டல், 'கேளுங்கள், கேளுங்கள்' என்ற ஒலிகள் வருதல் உண்டு. துறவிகள் இருக்கும் குடிசைகளை நாடி உண்மை அதிகாரிகளே (பக்குவம் வாய்ந்தவர்கள்) அத் துறவிகளைச் சந்திக்கச் செல்வார்கள். இச் சாதகர்களின் உள்ளங்களில் உண்மையாகவே துறவிகளின் போதனைகள் ஊடுருவிச் செல்கின்றன. துறவி செய்யக் கூடிய மிக உயர்ந்தசேவை சாதகர்களுக்குப் பயிற்சி தருவதுதான். ஒவ்வொரு சாதகரும் ஆன்மீக மையமாக அல்லது சாந்தி ஞான ஆனந்தத்தை ஒலிபரப்பும் கேந்திரமாக உருவாவார். துறவி சஞ்சாரம் செய்வதால் அவருடைய காலம் வீணாகிறது. பல்வேறு வகையான மக்கள் அனை வரும் ஆவல் காரணமாகவே அவரைச் சந்திக்க வருகின்றனர். இக்காலத்தில் இல்லறவாசிகள் துறவிகளின் தேவைகளை நிறைவேற்றுவதில்லை. அவர்கள் சுயநலத்தின் எல்லையை அடைந்து விட்டனர். அவர்கள், "சுவாமிஜி மகராஜ்! அடியேன் செய்யக்கூடிய சேவை ஏதேனும் இருந்தால் கட்டளையிட்டருளுங்கள்," என்று சொல்லி,

உதட்டளவில் கருணை காட்டுகிறார்கள். இது வெறும் போலித்தனம், வஞ்சகம், கபட தந்திரம்.

காவிநிற ஆடையை ஒருவன் அணியும்போது வாழ்வின் புனித மார்க்கத்தில் நுழைந்திருப்பதாகவும், தன் தோள்களின்மீது பெரும் பொறுப்பு இருப்பதாகவும், உலகின் மத, ஆன்மீக குருவாக விரைவில் தான் ஆகப்போவதையும் நினைவில் கொள்ளவேண்டும். கண்ணியமான தெய்வீகக் குணங்களை மேற்கொள்ளவும், தூய்மையும் வைராக்கியமும் மிகுந்த இலட்சிய வாழ்வை நடத்தவும் தன்னால் முடிந்தமட்டும் முயலவேண்டும்.

உண்மையான துறவிகள் உலகின் கலங்கரை விளக்கங்களாகவும் வழிகாட்டிகளாகவும் உள்ளனர். கடல் அலைகளின் நெடுந்தூரத்துக்கு அப்பால் உள்ள மாலுமிகளுக்குக் கலங்கரை விளக்கம் தன் ஒளியை அனுப்புவதுபோல் தொலைதூர நாடுகளில் அறியாமையிலும் இருளின் சேற்றிலும் புதைந்துள்ள மக்களுக்குத் துறவி தம் தெய்வீக ஒளியைப் பரப்புகின்றார்.

யாவும் துறந்து மெய்யுணர்வு நெறியில் நடைபோடும் உண்மையான துறவிகளின் பெரும் புகழ் வளர்க! தங்கள் சொரூபமான பிரம்ம நிஷ்டையில் லயித்துள்ள துறவிகள் வாழ்க! வாழ்க! ஆன்மீக அறிவை அவனி எங்கும் பரப்பும் பிரம்ம வித்தையில் வல்ல குருமார்கள், பரிவ்ராஜக ஆசாரியர்களின் பெரும் புகழ் ஓங்குக! ஓங்குக! நம் அனைவர் மீதும் அவர்களின் நல்லாசிகள் பொழிவதாக!

---

# பின் இணைப்பு

## குரு கீதையின் சாரம்

மங்களா சரணம் சிஷ்டாத்வை பலதர்சனுத்;
மங்களம் பகவான் விஷ்ணுமங்களம் கருடத்வஜ
மங்களம் புண்டரீகாக்ஷா மங்களாய தனம் ஹரி.

(புனிதமான சாந்தி மந்திரம் தொடக்கத்தில் சொல்லப்பட வேண்டும்; ஏனெனில் அது சமயச் சான்றோர்களின் வழக்கமாக இருக்கின்றது; மேலும் அது விரும்பிய பலனைத் தருகிறது.)

பகவான் விஷ்ணு மங்களகரமானவர். கருடனை வாகனமாகக் கொண்டபெருமான் மங்களகரமான வர். தாமரைக் கண்ணனுகிய இறைவன் மங்களகர மானவர். மங்களகரமான பேரின்ப வீட்டில் பகவான் ஹரி உறைகின்றார். (1)

சச்சிதானந்த கந்தாய ஜகதம்குரஹேதவே
ஸதோதிதாய பூர்ணுய நமோ அனந்தாய விஷ்ணவே.

நிறைநிலை படைத்தவராகவும் என்றும் உயர்ந் தவராகவும் அகிலாண்டங்கள் தோன்றுவதற்குக் காரணராகவும் சச்சிதானந்தத்தின் மிக உயர்ந்த வெளிப்பாடாகவும் இருக்கின்ற முடிவற்ற விஷ்ணு பகவானுக்குப் பணிவான வணக்கம். (2)

சத்யானந்த ஸ்வரூபாய பௌதைக சுக காரிணே
நமோ வேதாந்த வேத்யாய குரவே புத்தி சாக்ஷிணே.

ஞானத்தின் சாட்சியாகவும் வேதாந்தத்தினல் அறியப்படுகின்ற வராகவும் முழு உள்ளுணர்வின் இன்ப வாயிலாகவும் உண்மை இன்பத்தின் சார மாகவும் இருக்கின்ற குருவுக்குப் பணிவான வணக்கம். (3)

**குருர்பிரம்மா குருர்விஷ்ணு: குருர்தேவோ மஹேஸ்வர:**
**குருஸ்சாக்ஷாத் பரம்பிரம்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

குருவே பிரம்மா; குருவே விஷ்ணு; குருவே சிவம்; குருவே மேலான இறைவன். அந்தக் குருவுக்குப் பணிவான வணக்கம். (4)

**அஜ்ஞான திமிராந்தஸ்ய ஞானாஞ்ஜன சலாகயா**
**சக்ஷுருன் மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

அஞ்ஞான இருளால் பார்வையற்றுப் போனவர்க்கு ஞானம் என்னும் அஞ்ஜனக் கோலால் கண்களைத் திறந்துவிடும் குருவுக்குப் பணிவான வணக்கம். (5)

**ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப்தம் யத் கிஞ்சித் ச சராசரம்**
**தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

'நீ' என்ற சொல்லின் உண்மையைக் காட்டுபவரும், நிற்பவை நடப்பவை ஆகிய உயிர்களோடு கூடிய, அசைவனவும் அசையாதனவுமாகிய அகிலாண்டங்களின் படைப்பினூடே விரவியிருப்பவரும் ஆகிய குருவுக்குப் பணிவான வணக்கம். (6)

**அகண்ட மண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம்**
**தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

'அது' என்ற சொல்லின் உண்மையைக் காட்டுபவரும், பிரிவற்ற முடிவற்ற நிலையின் வடிவில் அசைகின்ற, அசையாத படைப்பினூடே விரவியிருப்பவரும் ஆகிய குருவுக்குப் பணிவான வணக்கம். (7)

**சின்மயம் வ்யாபிதம் சர்வம் த்ரைலோக்யம் ஸ சராசரம்**
**அஸத்வம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

('நீ அதுவாய் இருக்கிறாய்' என்ற வாக்கியத்தில்) 'இருக்கிறாய்' என்ற சொல்லின் உண்மையைக் காட்டுபவரும், அனைவருடைய உள்ளுணர்வாகிய வடிவத்தில் மூவுலகில் உள்ள அசையும், அசையா உயிர்களினூடே விரவியிருப்பவரும் ஆகிய குருவுக்குப் பணிவான வணக்கம். (8)

**சைதன்யம் சாஸ்வதம் சாந்தம் வ்யோ மாதீதம் நிரஞ்சனம்**
**நாதபிந்து கலாதீதம் தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

நாதவிந்து கலைகளுக்கு அப்பாற்பட்டவராகவும், தூய உள்ளுணர்வாகவும், நிலைபெற்றவராகவும், அமைதியுள்ளவராகவும், காலத்துக்கு அப்பாற்பட்டவராகவும், கறை படியாதவராகவும் உள்ள குருவுக்குப் பணிவான வணக்கம். (9)

**யத் ஸத்யேன ஜகத் ஸத்யம் யத் ப்ரகாசேன பாதியத்**
**யதானந் தேன நந்தந்தி தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

யார் இருப்பதனுல் உலகம் இருக்கிறதோ, யாருடைய ஒளியால் உலகம் ஒளிபெற்று விளங்குகிறதோ, யாருடைய பேரின்பத்தால் அனைவரும் இன்புற்றிருக்கிருர்களோ அந்தக் குருவுக்குப் பணிவான வணக்கம். (10)

**ந குரோ ரதிகம் தத்வம் ந குரோ ரதிகம் தப:**
**ந குரோ ரதிகம் க்ஞானம் தஸ்மை ஸ்ரீ குரவே நம:**

குருவுக்கு மேல் உண்மை இல்லை. குருவுக்கு மேல் தவம் இல்லை. குருவுக்குமேல் ஞானம் இல்லை. அந்தக் குருவுக்குப் பணிவான வணக்கம். (11)

**த்யான மூலம் குரோர் மூர்த்தி: பூஜா மூலம் குரோர் பதம்**
**மந்த்ர மூலம் குரோர் வாக்யம் மோக்ஷ மூலம் குரோர்க்ருபா.**

தியானத்தின் வேர் குருவின் வடிவம். வழிபாட்டின் வேர் குருவின் காலடிகள். எல்லா மந்திரங்களின் வேர் குரு போதனை. முக்தியின் வேர் குருவின் கருணை. (12)

**குருபாதோதகம் பானம் குரோருச்சிஷ்ட போஜனம்**
**குருமூர்த்தே ஸதா த்யானம் குரோர் நாம ஸதா ஜப:**

குருவின் காலடிகளை மஞ்சன மாட்டிய நீர் புனிதபானம். குரு உண்டபின் மீதமாக இருப்பது தகுந்த உணவாகும். குரு வடிவைத் தியானிப்பதே சரியான தியானம். இடையறுத ஜபத்திற்குரியது குருவின் திருநாமம். (13)

**அஞ்ஞான மூல ஹரணம் ஜன்ம கர்ம நிவாரணம்**
**க்ஞான வைராக்கிய ஸித்யர்த்தம் குரோர்:**
**பாதோதகம் பிபேத்.**

ஞானத்தையும் வைராக்கியத்தையும் அடைவதன் பொருட்டுக் குருவின் காலடிகளை மஞ்சனமாட்டிய நீரைக் குடிக்க வேண்டும். அது அஞ்ஞானத்தை வேரறுத்துப் பிறப்பையும் கர்ம பந்தத்தையும் வெற்றிகொள்கிறது. (14)

**காசீ க்ஷேத்ரம் நிவாஸஸ்ச ஜாஹ்னவீ சரணோதகம்**
**குருர் விசேஸ்வர: ஸாக்ஷாத் தாரகம் ப்ரஹ்ம**
**நிஸ்சயம்.**

வாழும் இடமே காசி. குருவின் காலடிகளை நீராட்டிய நீரே கங்கை. குரு சிவமே. சந்தேகமின்றி மேலான பிரம்மம் தாரக மந்திரம். (15)

**ஆஸனம் சயனம் வஸ்த்ரம் வாஹனம் பூஷாணாதிகம்**
**ஸாதகேன ப்ரதாதவ்யம் குரு ஸந்தோஷ காரகம்**

இருக்கை, படுக்கை, உடை, வாகனம், அணிகலன்கள் முதலியவற்றைச் சாதகன் (சீடன்) குருவுக்கு வழங்கி அவரை மகிழ்விக்க வேண்டும். (16)

**சரீரம் இந்திரியம் ப்ராணன் அர்த்த ஸ்வ ஜன**
**பாந்தவான்**
**ஆத்ம தாராதிகம் ஸர்வம் சத்குருப்யோ நிவேதயேத்.**

உடல், பொறிகள், ஆவி, செல்வம், நண்பர், உறவினர், தான், தன் மனைவி, இன்னும் அனைத்தையும் உண்மை குருவுக்கு அர்ப்பணிக்க வேண்டும். (17)

**குருரேகோ ஜகத் ஸர்வம் ப்ரஹ்ம விஷ்ணு சிவாத்மகம்**
**குரோ: பரதரம் நாஸ்தி தஸ்மாத் சம்பூஜயேத் குரும்.**

பிரம்மா, விஷ்ணு, சிவம் உள்ளிட்ட சர்வ உலகமும் குருவே. குருவைக் காட்டிலும் மேம்பட்டது எதுவும் இல்லை. எனவே குருவுக்கு நன்கு வழிபாடு செய்ய வேண்டும். (18)

*கர்மணா மனஸா வாசா ஸர்வதா ஆராதயேத் குரும்*
*தீர்க்கதண்டம் நமஸ்க்ருத்ய நிர்லஜ்ஜோ*
*குரு ஸன்னிதெள.*

கூச்சத்தின் எந்த உணர்வும் இல்லாமல் குருவின் முன்னால் முழு உடலுடன் வீழ்ந்து பணிந்து வணங்கி எல்லா நேரங்களிலும் குருவை மனமொழி மெய்களால் வழிபட வேண்டும். (19)

*ஸப்தஸாகர பர்யந்தம் தீர்த்த ஸ்நான பலம் யதா*
*குருபாதோத பிந்தோஸ்ச்ச ஸஹஸ்ராம்சேன*
*தத் பலம்.*

ஏழு கடல்களுக்கும் புனித யாத்திரை சென்று மூழ்கியதனால் வரும் பலன், குருவின் காலடிகளை நீராட்டிய நீரின் ஒரு துளியைப் பருகியதனால் வரும் பலனில் ஆயிரத்தில் ஒரு பகுதிதான். (20)

*சிவேருஷ்டே குருஸ்த்ராதா குரெளருஷ்டே*
*ந கஸ்சன*
*லப்த்வா குலகுரும் ஸம்யக்குருமேவ ஸமாஸ்ரயேத்.*

இறைவன் சினந்துகொள்ளும் போது குருதான் பாதுகாவல். குரு சினந்தால் பாதுகாவலர் யாரும் இல்லை. ஆ த லா ல் குடும்ப குருவை (தகுந்த குருவை) அடைந்து அவரின் கீழ்த் தகுந்த பாதுகாப்பைப் பெற வேண்டும். (21)

*ஸ்ரீ நாத சரணாத்வந்தம் யஸ்யாம் திஸி விராஜதே*
*தஸ்யாம் திஸி நம்ஸ்க்ருத்யாத் பக்த்யா ப்ரதி*
*தினம்ப்ரியே.*

லட்சுமி நாயகனின் இணையான திருவடிகள் ஒளிரும் திக்கு நோக்கி நாள்தோறும் பக்தியுடன் கீழே விழுந்து வணங்க வேண்டும். (22)

**ப்ரஹ்மானந்தம் பரமஸௌகதம் கேவலம் க்ஞானமூர்த்திம்**
**த்வந்வாதீதம் ககன ஸத்ருஸம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம்**
**ஏகம்நித்யம் விமலம் அசலம் சர்வதீசாக்ஷி பூதம்**
**பாவாதீதம் த்ரிகுணரஹிதம் சத்குரும் தம் நமாமி.**

சத்தாகவும் முக்குணங்களைக் கடந்தும் அறிவுக்கு எட்டாமலும், எல்லா மனங்களின் சாக்ஷியாகவும், மாறாமலும், தூய்மையாகவும், ஒன்றாக

வும், நித்தியமாகவும் முரண்படும் இரட்டைகளைக் கடந்தும், ஆகாயம் போல் பரவியும், 'தத்வமஸி' போன்ற மகா வாக்கியங்களால் அடையக் கூடிய நிலையிலும், பிரம்மானந்தமாகவும், பேரின்பம் வழங்கக் கூடியவராகவும், முழு ஞானத் திரட்சி வடிவாகவும் இருக்கின்ற குருவைப் பணிந்து வணங்குகிறேன். (23)

**ஆனந்தமானந்த கரம் ப்ரசன்னம் க்ஞானஸ்வரூபம் நிஜபாவயுக்தம்**
**யோகீந்த்ரமீட்யம் பவரோக வைத்யம் ஸ்ரீமத்குரும் நித்யமஹம் நமாமி.**

சம்சார நோயைத் தீர்க்கும் வைத்தியராகவும், வணங்கத்தக்க யோகிகளின் தலைவராகவும், பேரின்பமாகவும், மகிழ்ச்சி தரும் வாயிலாகவும், எப்போதும் மன நிறைவு பெற்றவராகவும், மெய் யுணர்வின் சாரமாகவும், உண்மையான சத் பொருளுடன் ஒன்றாக அறியப்படுபவராகவும் இருக்கின்ற வழிபடத் தக்க குருவின் முன்னால் எப்போதும் பணிந்து வணங்குகின்றேன். (24)

**ஹ்ருத் அம்புஜே கர்ணிக மத்ய ஸம்ஸ்தம் ஸிம்ஹாஸனே ஸம்ஸ்தித திவ்யமூர்த்திம்**
**த்யாயேத்குரும் சந்த்ர கலாப்ரகாசம் ஸச்சித் சுகாபீஷ்டவரம் ததானம்.**

இதய கமலத்தின் நடுவே அரியாசனத்தில் இடம் பெற்றவர் போல் வீற்றிருப்பவராகவும், சந்திர கலை போல் ஒளிபெற்று விளங்குபவராகவும், சச்சிதானந்தத்தை அடைய வேண்டும் என்று விரும்பிய வரத்தை வழங்கத் தயாராக இருப்பவராகவும் உள்ள குருவின் தெய்வீக வடிவத்தைத் தியானம் செய்ய வேண்டும். (25)

**நித்யசுத்தம் நிராபாசம் நிராகாரம் நிரஞ்ஜனம்**
**நித்யபோதம் சிதானந்தம் குரும் ப்ரஹ்ம நமாம்யஹம்.**

பிரம்மம் உள்ளுணர்வாகிய இன்பம், நித்திய ஞானம், கறைபடியாமை, உருவின்மை, பிரதிபிம்ப

மற்ற தன்மை (தோற்றங்களைக் கடந்த நிலை), தூய்மை, நிலைபேறு ஆகியவையாக உள்ள குருவுக்கு முன்னால் பணிந்து வணங்குகிறேன். (26)

**குரும் தும் க்ருத்ய ஹீம் க்ருத்ய குருஸான்னித்ய பாஷண**
**அரண்யே நிர்ஜலே தேசே ஸம்பவேத் ப்ரஹ்ம ராக்ஷஸ:**

குருவினிடம் 'நீ' என்று பேசுபவன், குருவின் முன்னிலையில் 'ஹம்' என்று சொல்பவன், அநாகரிகமாகப் பேசுபவன், தண்ணீரில்லாத காட்டுப் பகுதியில் பிரம்மராக்ஷஸாக (அஞ்சத்தக்க அரக்கன்) மாறி விடுவான். (27)

**நித்யம் ப்ரஹ்ம நிராகாரம் நிர்க்குணம் போதயேத்பரம்**
**பாஸயன் ப்ரஹ்மபாவம் ச தீபோ தீபாந்தரம் யதா.**

ஒரு தீபத்திற்கும் இன்னொரு தீபத்திற்கும் உள்ள தொடர்பினைப் போல் தன்னைப் பிரம்மமாக நிச்சயிப்பதனால் குணமற்ற, உருவமற்ற நித்திய மான பரப்பிரம்மத்தை அறிய வேண்டும். (28)

**வந்தே அஹம் ஸச்சிதானந்தம் பாவாதீதம் ஜகத்குரும்**
**நித்யம் பூர்ணம் நிராகாரம் நிர்க்குணம் ஸ்வாத்ம**
**ஸம்ஸ்திதம்.**

சிந்தனைக்கெட்டாத சச்சிதானந்தத்தை, அகிலாண்ட நாயகனை, நித்தியனை, நிறைவானவனை, வடிவமற்றவனை, குணமற்றவனை, அனைவர் உள்ளத்தில் உறையும் ஆத்மனை வணங்குகின்றேன். (29)

**குரு: சிவோ குருர் தேவோ குருர் பந்து: சரீரிணாம்**
**குருராத்மா குருர்வீர்யோ குரோரன்யன் ந வித்யதே.**

குருவே சிவம். குருவே கடவுள். மனித இனத்திற்குக் குருவே உறவு (நண்பன்). குருவே ஆத்மன். குருவே உயிர். குருவைத் தவிர எதுவும் இல்லை. (30)

**க்ஞானஹீனோ குருஸ்த்யாஜ்யோ மித்யாவாதீ விடம்பக:**
**ஸ்வ விஸ்ராந்திம் ந ஜானாதி பரசாந்திம் கரோதி கிம்.**

அறிவில்லாத, பொய்மையே பேசும், கபட குருவை வெறுக்க வேண்டும். தன் அமைதியையே தேடிக் கொள்ளத் தெரியாத அவன், பிறருக்கு எவ்வாறு அமைதி தர முடியும்? (31)

**பாகண்டின: பாபரதா நாஸ்திகா பேதபுத்தய:**
**ஸ்த்ரீலம்படா துராசாரா: க்ருதக்னு பகவ்ருத்தய:**

கடவுள் நம்பிக்கை இல்லாதவர்கள், பாவிகள், நாத்திகர்கள், மாறுபடும் மன நிலையுள்ளவர்கள், பெண் பித்தர்கள், கெட்ட நடத்தையுள்ளவர்கள், முரடர்கள் ஆகியோர் குருமார்கள் அல்லர். *(32)*

**நிரஸ்தஸர்வ ஸந்தேகமேகீ க்ருத்ய ஸுதர்சனம்**
**ரஹஸ்யம் யோதர்ஸயதி பஜாமி குரும் ஈஸ்வரம்.**

தோற்றந்தருவன அனைத்தையும் விலக்குவதனுலும், சந்தேகங்கள் அனைத்தையும் போக்குவதனுலும், உள்ளுணர்விஞல் ஆழ்ந்திருக்கச் செய்வதனுலும், உள் இரகசியத்தைக் காட்டும் குருவாகிய இறைவனிடத்தில் அடைக்கலம் புகுகின்றேன். *(33)*

**குரவோ பஹவ: சந்தி சிஷ்ய வ்ருத்ய பஹாரகா:**
**தமேகம் துர்லபம் மன்யே சிஷ்ய ஹ்ருத் தாபஹாரகம்.**

சீடர்களின் வாழ்க்கையை வெளிக் கொணரும் குருமார்கள் பலர் இருக்கிருர்கள்; ஆனுல் சீடர்களின் இதய நோயைப் போக்கும் குரு மிகவும் அரிதாகவே காணப்படுகின்ருர். *(34)*

**சாதுர்யவான் விவேகீ ச அத்யாத்ம க்ஞான வாஞ்ச்சுசி:**
**மானஸம் நிர்மலம் யஸ்ய குருத்வம் தஸ்ய ஸோபதே.**

திறமை வாய்ந்த, பாகுபாடு கண்டறியும், ஆன்மீக ஞானம் நிரம்பிய, தூய மனத்தெளிவு மிகுந்த குருவின் தலைமை உண்மையில் புகழொளி பெற்று விளங்குகிறது. *(35)*

**குரவோ நிர்மலா: சாந்தா: ஸாதவோ மிதபாஷிணு:**
**காமக்ரோத விநிர்முக்தா: ஸதாசாரா ஜிதேந்த்ரியா:**

குருமார்கள் தூய்மையும் இனிய இயல்பும் சுருங்கிய பேச்சும், காம வெகுளிகளிலிருந்து விடுபட்டும், நேர்மையான நடத்தையும் தன்னடக்கமும் உள்ளவர்கள். *(36)*

ஏகாக்ஷர ப்ரதாதாரம் யோ குரும் நைவ மன்யதே
சுனும் யோனிசதம் கத்வா சண்டாலேஷ்வபி ஜாயதே.

ஓரேழுத்து மந்திர (ஓம்) தீக்ஷை தரும் குருவின் பொருட்டு அக்கறை கொள்ளாதவன் நூற்றுக் கணக்கான பிறவிகளில் நாயாகப் பிறந்து பின் சண்டாளர்களிடையே பிறக்கிறான். (37)

குருத்யாகாத் பவேன் ம்ருத்யுர் மந்த்ர த்யாகாத் தரித்ரதா
குருமந்த்ர பரித்யாகீ ரௌரவம் நரகம் வ்ரஜேத்.

குருவைக் கைவிடுபவனுக்கு மரணம் நிச்சயம். குரு மந்திரத்தைக் கைவிடுபவன் வறுமைப் பிணியில் அகப்படுகிறான். குரு போதித்த மந்திரத்தைக் கைவிடுபவன் ரௌரவ நரகத்திற்குச் செல்லுகிறான். (38)

ஸப்தகோடி மஹாமந்த்ராஸ்ச்சித்த விப்ரமகாரகா:
ஏக ஏவ மஹாமந்த்ரோ குருரித்யக்ஷரத்வயம்.

ஏழு கோடி மகா மந்திரங்களும் மனக் குழப்பத்தையே உண்டாக்குகின்றன. இரண்டு எழுத்துச் சொல்லாகிய 'குரு' என்ற மகா மந்திரம் ஒன்றே நலம் பயப்பதாகும். (39)

குகாரஸ்ச் சாந்தகாரஸ்ச்ச ருகாரஸ் தன்னிரோதக்ருத்
அந்தகார விநாஸித்வாத் குருரித்ய பிதீயதே.

'கு' என்பது இருள், 'ரு' என்பது அதனை நீக்குவது. இருளை நீக்குபவராதலின் 'குரு' என்று அழைக்கப்படுகிறார். (40)

ஸ்ரத்தாலுர்முக்தி வாக்யேஷு வேதாந்தக்ஞான லிப்சயா
உபாயனகரோ பூத்வா குரும் ப்ரஹ்மாவிதம் வ்ரஜேத்

முடிவான முக்தி நிலையை அறிவிக்கும் வாக்கியங்களில் நம்பிக்கை வைத்து வேதாந்த ஞானத்தைப் பெறுவதன் பொருட்டுக் காணிக்கைகளுடன், பிரம்மத்தை அறிந்த குருவினிடம் முழு பக்தியுடன் செல்லவேண்டும். (41)

**ச்ரவணும்து குரோ: பூர்வம் மனனம் ததனந்தரம்**
**நிதித்யாஸன மித்யேதத் பூர்ண போதஸ்ய காரணம்.**

முதலில் செய்ய வேண்டியது குருவின் முன் அமர்ந்து கேட்டல். பின்னர் அவர் சொன்னதைக் குறித்துச் சிந்தனே செய்ய வேண்டும். அதன்பிறகு செய்யும் ஆழ்ந்த தியானம் நிறை ஞானத்துக்குக் காரணமாகிறது. *(42)*

**யதா யதா ஜாத்யந் தஸ்ய ரூபக் ஞானம் ந வித்யதே**
**ததாகுருபதேஸேன விநாகல்பகோடி பிஸ்தாவ**
**க்ஞானம் ந வித்யதே.**

பிறவிக் குருடனுக்கு வடிவங்களைப் பற்றிய அறிவு இல்லை. அதுபோலவே குருவினிடம் தீக்ஷை பெற்றாலன்றி, கோடிக்கணக்கான பிறவிகளை அடைந்தாலும் ஒருவன் மெய்யுணர்வு பெற முடியாது. *(43)*

**யதா சத்குரு கடாக்ஷோ பவதி ததா பகவத்கதா**
**ச்ரணவத் யானுதௌ ச்ரத்தாஜாயதே**
**சாந்தோ தாந்தோ அதிவிரக்த: ஸுச்ரத்தாலு:**
**குரு பக்தஸ் தபோனிஷ்ட:**

குரு கிருபை வாய்க்கும்போது தெய்வீகக் கதைகள் கேட்பதில், தியானம் செய்வதில் முதலியவற்றில் உறுதி பிறக்கிறது. சீடன் அமைதியாகவும் தன்னடக்கத்தோடும் மிகுந்த வைராக்கியத்தோடும் முழு நம்பிக்கையோடும் குருவினிடம் பக்திபூண்டு கடுமையான விரதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். *(44)*

**சிஷ்யோ ப்ரஹ்மநிஷ்டம் குருமாசாத்ய ப்ரதக்ஷிண**
**பூர்வகம் தண்டவத்**
**ப்ரணம்ய ப்ராஞ்ஜலிர் பூத்வா விநயேனுப சங்கம்ய**
**பகவன் குரோ மே பரமதத்வ ரஹஸ்யம் விவிதம்**
**வக்தவ்ய மிதி.**

சீடன் பிரம்ம நிஷ்டையிலிருக்கும் குருவை அணுகி அவரை வலம் வந்து அவர் முன்னுல் பணிந்து விழுந்து வணங்கி எழுந்து இருகரம் கூப்பி மிகவும் பணிவுடன், 'பெருமானே! குருவே!

மேலான உண்மையின் இரகசியத்தை முழுமையாக எனக்குத் தெரிவியுங்கள்! என்று கேட்டுக் கொள்ள வேண்டும். (45)

**சர்வக்ஞம் சர்வகம் சாந்தம் சர்வேஷாம் ஹ்ருதயே ஸ்திதம்**
**சுசம்வேத்யம் குருமுகாத் சுதுர்போதம சேதஸாம்**
**திவ்யக்ஞானோப தேஷ்டாரம் தேசிகம் பரமேஸ்வரம்**
**பூஜயேத் பரயா பக்த்யா தஸ்ய க்ஞானபலம் பவேத்.**

பரமேஸ்வரனாகவும், தெய்வீக ஞானத்தை வழங்குபவராகவும், மந்த புத்தியுள்ளவர்களால் சிறிதும் அறிந்துகொள்ளப் படாதவராகவும், குரு போதனையால் சரியாக அறிந்துகொள்ளப் படுபவராகவும் அனைவர் இதயங்களிலும் வீற்றிருப்பவராகவும் அமைதி வடிவாகவும் எல்லா இடங்களிலும் விரவி இருப்பவராகவும் அனைத்தையும் அறிந்தவராகவும் இருக்கின்ற குருவை மிக உயர்ந்த பக்தியுடன் வணங்குபவன் ஞானமாகிய பழத்தை அடைவான். (46—47)

**யஸ்ய தேவே பரா பக்திர்யதா தேவே ததா குரௌ**
**தஸ்யை தே கதிதாஹ்யர்த்தா: ப்ரகாஸந்தே மஹாத்மன:**

இறைவனிடம் மிக உயர்ந்த பக்தி பூண்டு அவ்வாறே குருவினிடமும் பக்தியோடு இருக்கும் நல்லாசி பெற்றவனுக்கு இவ்வுண்மைகள் தாமாகவே வெளிப்படையாகின்றன. (48)

**கர்ணதாரம் குரும் ப்ராப்ய தத் வாக்யம் ப்லவத்வத் த்ருடம்**
**அப்யாஸ வாஸனு ஸக்த்யா தரந்தி பவஸாகரம்.**

குருவாக்கியம் என்னும் ஓடத்தில் அமர்ந்து சாதனைப் பயிற்சி, பூர்வ வாசனைகளின் வலிமை என்ற காற்றால் தள்ளப்பட்டுக் குரு என்ற மாலிமியால் வலிக்கப்பட்டு மக்கள், சம்சாரம் என்ற கடலைக் கடக்கின்றனர். (49)

துர்லபோ விஷயத் யாகோ துர்லபம் தத்வ தர்சனம்
துர்லபா ஸஹஜாவஸ்தா ஸத்குரோ: கருணாம்விநா.

குருவின் கிருபை இன்றிப் புலனிப்பப் பொருள்களைத் துறப்பதும், மெய்ஞ்ஞானக் காட்சி பெறுவதும், மெய்யுணர்வு பெறுவதும் கடினம். (50)

ஓம்நம: சிவாய குரவே ஸச்சிதானந்த மூர்த்தயே
'நிஷ்ப்ரபஞ்சாய சாந்தாய நிராலம்பாய தேஜஸே.

சச்சிதானந்தத்தின் சாரமாகவும் உலகு அற்றவராகவும் அமைதி நிரம்பியவராகவும் பற்றுக்கோடு அற்றவராகவும் ஒளியுடன் விளங்குபவராகவும் இருக்கின்ற குருவாகிய சிவபெருமானுக்குப் பணிவான வணக்கம். (51)

த்வம்ஹி விஷ்ணுர் விரிஞ்சிஸ்த்வம் த்வம் ச தேவோ மஹேஸ்வர:
த்வமேவ ஸக்திரூபாசி நிர்க்குணஸ்த்வம் ஸனாதன.

நீயே விஷ்ணு, நீயே பிரம்மா, நீயே மஹேஸ்வரக் கடவுள். நீதான் சக்தி வடிவம். குணங்களற்ற நித்தியம் நீயே. (52)

நம சாந்தாத்மனே துப்யம் நமோ குஹ்ய தமாய ச
அசிந்த்யா யாப்ரமேயாய அனாதி நிதனாய ச.

அமைதி வடிவாகவும் மறைபொருளான பெரிய இரகசியமாகவும் சிந்தனைக்கு எட்டாதவராகவும் அளக்கமுடியாததாகவும் ஆதியந்தம் அற்றதாகவும் உள்ள உனக்குப் பணிவான வணக்கம். (53)

நமஸ்தே சதே தே ஜகத் காரணாய நமஸ்தே கிதே சர்வ லோகாஸ்ரயாய
நமோ அத்வைத தத்வாய முக்திப்ரதாய
நமோ ப்ரஹ்மணே வ்யாபினே சாஸ்வதாய.

சத்தாகவும் அகிலாண்டங்களின் காரணமாகவும் இருக்கின்ற உனக்குப் பணிவான வணக்கம். எல்லா உலகங்களுக்கும் பற்றுக்கோடாக இருக்கின்ற ஒரே உள்ளுணர்வாகிய உனக்குப் பணிவான வணக்கம். இரண்டற்ற உண்மையாகவும் முக்தியை வழங்குபவராகவும் உள்ள உனக்குப் பணிவான

வணக்கம். அனைத்தையும் ஊடுருவியிருக்கின்றதாக வும், நித்தியமாகவும், பிரம்மமாகவும் உள்ள உனக்குப் பணிவான வணக்கம். (54)

**ஈஸ்வரோ குரு ராத்மேதி மூர்த்தி பேதவிபாகினே**
**வ்யோமவத் வ்யாப்த தேஹாய தக்ஷிணாமூர்த்தயே நம:**

இறைவன், குரு, தான் என்ற மூன்று வடிவங்களாகவும், ஆகாயம் போன்ற தன் வடிவினால் ஒவ்வொரு பொருளையும் ஊடுருவியும் இருக்கின்ற தென்முகக் கடவுளுக்குப் பணிவான வணக்கம். (55)

**நிதயே சர்வவித்யானும் பிஷஜே பவரோகிணாம்**
**குரவே ஸர்வ லோகானும் தக்ஷிணாமூர்த்தயே நம:**

எல்லாக் கல்வித் துறைகளின் பிறப்பிடமாகவும் பிறவிப் பிணியால் வருந்தும் அனைவர்க்கும் வைத்தியநாதனாகவும் எல்லா உலகத்தாருக்கும் குருவாகவும் இருக்கின்ற தென்முகக் கடவுளுக்குப் பணிவான வணக்கம். (56)

**சர்வபாப ப்ரசமனம் தர்ம காமார்த்த மோக்ஷதம்**
**யம்யம் சிந்தயதே காமம் தம்தம் ப்ராப்னோதி நிஸ்ச்சிதம்.**

இது (குரு கீதை) எல்லாப் பாவங்களையும் போக்குவது; அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய வற்றை வழங்குவது. தான் பெற விரும்பிய பொருள் எதையும் ஒருவன் இதனால் பெறுகிறான். இது நிச்சயம். (57)

**சுசீபூதா க்ஞானவந்தோ குருகீதாம் ஜபந்தி யே**
**தேஷாம் தர்சன சம்ஸ்பர்ஸாத் புனர்ஜன்ம ந வித்யதே.**

தூய மனதுடன் நிறைந்த அறிவுடன் இடையறாது இந்தக் குருகீதையைச் சொல்லுகிறவரைக் காண்பதனால் கூட, தொடுவதனால் கூட ஒருவன் மீண்டும் பிறக்கின்ற நிலையிலிருந்து விடுவிக்கப் படுகிறான். (58)

ஓம் சாந்தி சாந்தி சாந்தி !

---

# படலம் ஒன்பது

## குரு பக்தி யோகம்

விரைவில் கடவுட் காட்சியைப்பெறக் கலியுக சாதனமாகக் கீர்த்தன சாதனை ஏற்கப்பட்டுள்ளது போலவே உங்களுக்கு இங்கு புதிய யோகம் — தற் பெருமையும் அகம்பாவமும், நாத்திகமும் சந்தேக மும் மிகுந்துள்ள இந்த யுகத்திற்கு மிகமிகப் பொருத்தமான யோகம் உள்ளது. இதுவே குரு பக்தி யோகம். இது மிகவும் அற்புதமானது. இதன் ஆற்றல் அளவு கடந்தது. இதன் நலம் ஒருபோதும் தவறாதது. குருபக்தியின் உண்மையான பெருமை சொல்லுக்கு அடங்காது. இறைவனை உங்கள் முன்னால் தசையும் இரத்தமும் உள்ள உடலுடன் கூடியவராய் இவ்வாழ்விலேயே உங்களோடு உடன் உலவச் செய்யும் இந்த யோகம் இந்த யுகத்திற்குத் தலைசிறந்தது. சாதகனின் மிகவும் மோசமான பகைவன், நீக்கமுடியாத ரஜோகுணத் தன்மை யுள்ள 'தான்' என்ற அகங்காரமாகும். ஆணவத்தை அழிக்கவும் நச்சுத் தன்மையுள்ள அகம்பாவம் கரையவும் குருபக்தி யோகமே நிச்சயமான மிகச் சிறந்த சாதனமாகும். குறிப்பிட்ட அபாயகரமான கிருமி, குறிப்பிட்ட தனித்தன்மை வாய்ந்த கிருமி நாசினியால் மட்டுமே அழிக்கப்படுவதுபோல, அவித்தை அகங்காரம் ஆகியவற்றை அழிப்பதற்குக் குருபக்தி யோகமே தன்னிகரற்றதும் தனித்தன்மை வாய்ந்ததுமாகும். மாயை கொல்லியாகவும் அகம் பாவக் கொல்லியாகவும் ஆற்றல் வாய்ந்து விளங்கு வது குருபக்தி யோகம். குருபக்தி யோக ஆர்வத் தில் தன்னைக் கரைத்துக்கொள்ளும் நற்பேறு வாய்ந்த ஆத்மாவை மாயையும் அகம்பாவமும் ஒருபோதும் வருத்தமுடியாது; அவை தம் வலிமையை முற்றிலும் இழந்துவிடுகின்றன.

நேர்மையுடன் இந்த யோகத்தை ஏற்பவன் உண்மையில் அதிர்ஷ்டசாலி; ஏனெனில் அவன் மற்ற எல்லா யோகங்களிலும் உச்சநிலை வெற்றியை அடைவான். கர்மம், பக்தி, தியானம், ஞானம் ஆகியவற்றின் நிறைநிலைக்குரிய மேன்மையான பலன்கள் அவனிடம் பெருகும்.

இந்த யோகத்தை மேற்கொள்வதற்குரிய தகுதி யாவது நேர்மை, நம்பிக்கை, கீழ்ப்படிதல் என்ற எளிமையான முக்குணங்களேயாகும். நிறைநிலை பெறவேண்டும் என்ற ஆர்வங்களில் நீங்கள் நேர்மையாக இருக்கவேண்டும். அரைமனதோடும் உறுதியின்றியும் இருக்கக்கூடாது. பின்னர், குரு வாக நீங்கள் ஏற்றுக்கொண்டவரிடம் பரிபூர்ண நம்பிக்கை கொள்ளுங்கள். சந்தேகத்தின் நிழல்கூட உங்களை அணுகுவதற்கு இடந்தரவேண்டாம் அவரிடம் முழுநம்பிக்கை கொண்ட கணத்திலேயே அவர்தரும் போதனை உங்களின் மிக உயர்ந்த நன்மைக்காகத்தான் என்பதைப் புரிந்துகொள்ளுங் கள். ஆகவே மறுப்பேதும் இன்றி அவர் சொல்லுக் குக் கீழ்ப்படியுங்கள். எழுத்துக்கெழுத்து அவருடைய போதனைகளைப் பின்பற்றுங்கள். இவ் வாறு செய்வதில் நேர்மையாக இருங்கள்; என் வார்த்தையை நம்புங்கள்; நீங்கள் நிறைநிலையை அடைவீர்கள்; இதனை அழுத்தந் திருத்தமாக உங்களுக்கு உறுதி கூறுகின்றேன்.

## குருபக்தி யோகத்தின் ஒரு விளக்கத்தை இனிக் காண்போம்

1. குருபக்தி யோகம் என்பது குருவினிடம் முழுஅளவில் சரணாகதி யடைவதாகும்.

2. குருபக்தி யோகத்தின் முக்கியமான எட்டு உறுப்புக்களாவன :—

1) குருபக்தி யோகத்தைப் பயிலவேண்டும் என்ற உண்மையான நீடித்த ஆர்வம்.
2) சத்குருவின் எண்ணங்கள், சொற்கள், செயல்கள் ஆகியவற்றில் பரிபூர்ணமான நம்பிக்கை.
3) குருவின் நாமத்தை ஓதுவதும் பணிவுடன் சாஷ்டாங்க நமஸ்காரத்தைச் செய்வதும்.
4) குருவின் கட்டளைகளை நிறைவேற்றுவதில் பரிபூர்ணமாகக் கீழ்ப்படிந்து நிற்றல்.
5) பலன் எதிர்பாராமல் குருவுக்கு உடம்பால் சேவை செய்தல்.
6) பாவனையோடும் பக்தியோடும் சத்குருவின் பாதகமலங்களை நாள்தோறும் வணங்குவது.
7) சத்குருவின் தெய்வீக இயக்கத்திற்காக உடல், பொருள், ஆவி ஆகியவற்றை அர்ப்பணித்தல் அல்லது ஒப்புவித்தல்.
8) சத்குருவின் பரிவுமிகுந்த கருணையைப் பெறுவதற்காக அவருடைய புனிதமான திருவடிகளைத் தியானம் செய்வதும், அவருடைய புனித உபதேசத்தைக் கேட்பதும், அதை நேர்மையாகப் பின்பற்றுவதும்.

3. குருபக்தி யோகம் தனித்துத் தானே ஒரு யோகம் ஆகும்.

4. குருபக்தி யோகத்தைப் பயிலாத ஒரு சாதகன் இறை ஐக்கியத்துக்கு இட்டுச் செல்லும் ஆன்மீக வழியில் நுழைய இயலாது.

5. குருபக்தி யோகத்தின் அமைப்பைப் புரிந்து கொள்ளக் கூடியவன்தான் குருவினிடம் நிபந்தனை யற்ற சரணாகதி அடையமுடியும்.

6. வாழ்வின் மிக உன்னத இலட்சியமாகிய மெய்யுணர்வைக் குருபக்தி யோகத்தினால் அடைய லாம்.

7. குருபக்தி யோகம் எவ்வகையான அச்சமும் இன்றிப் பயில்வதற்குரிய உண்மையான பாதுகாப் பான யோகம் ஆகும்.

8. குருபக்தி யோகத்தின் சாரம் குருவின் கட்டளைகளை முற்றிலும் கீழ்ப்படிந்து நிறைவேற்று வதிலும் அவருடைய போதனைகளை வாழ்வில் கடைப்பிடிப்பதிலும் உள்ளது.

9. குருபக்தி யோகத்தின் இலக்கு பொரு ளாட்சி அடிமைத்தனத்திலிருந்தும் பிரகிருதியின் தளைகளிலிருந்தும் மனிதனை விடுவித்துக் குரு வினிடம் பரிபூர்ண சரணாகதி அடைவதன் வாயிலாகத் தன் முழுச் சுதந்திர இயல்பை உணரச் செய்வதாகும்.

10. குருபக்தி யோகத்தைப் பயில்கின்றவன் 'தான்' என்ற அகந்தையைச் சிரமமின்றித் துடைத் தெறிந்துவிட முடியும்; சம்சாரச் சகதியை மிக எளிதில் கடக்கவும் முடியும்.

11. நேர்மையாகவும் ஒழுங்காகவும் குருபக்தி யோகத்தைப் பயில்கின்றவன்மீது அது அமரத்துவத் தையும் நிலையான பேரின்பத்தையும் பொழிகிறது.

12. குருபக்தி யோகப் பயிற்சி மனத்தில் அமைதியையும் உறுதியையும் உருவாக்குகிறது.

13. பேரின்ப சாம்ராஜ்ஜியத்தின் கதவுகளைத் திறக்கும் ஒரே சாவி குருபக்தி யோகமே.

14. வாழ்வின் குறிக்கோள் குருபக்தி யோகத் தைப் பயில்வதன் வாயிலாகச் சத்குருவின் பரிவு மிகுந்த அருளைப் பெறுவதாகும்.

15. சத்குருவின் வணங்கத்தக்க திருவடிகளைப் பணிவுடன் அணுகு. வாழ்வை உய்விக்கும் சத்குருவின் திருவடிகளில் விழுந்து வணங்கு. சத்குருவின் பாதகமலங்களில் அடைக்கலம் புகு. சத்குருவின் புனிதமான திருவடிகளை வணங்கு. சத்குருவின் புனிதமான திருவடிகளைத் தியானம் செய். சத்குருவின் புனிதப்படுத்தும் திருவடிகட்கு விலையுயர்ந்த காணிக்கைப் பொருள்களை வழங்கு. பெருமை மிகுந்த சத்குருவின் திருவடிகளுக்குச் சேவை செய்வதற்காக உன் வாழ்வை அர்ப்பணி. சத்குருவின் தெய்வீகத் திருவடிகளின் தூசியாகப் படிந்துவிடு. குருபக்தி யோகத்தின் இரகசியம் இதுவே.

16. சத்குருவின் புனிதமான திருவடிகளில் தானுகச் சரணுகதி அடைவதே குருபக்தி யோகத்தின் அடித்தளமாகும்.

17. உங்களிடம் இருக்கவேண்டியதெல்லாம் குருபக்தி யோக நெறியில் நேர்மையாகவும் ஆர்வத்துடனும் முயற்சி செய்வதாகும்.

18. குருபக்தி யோகப் பயிற்சியின் முக்கியமான அம்சம் குருவினிடம் பக்தி செலுத்துவது.

19. குருபக்தி யோக ஏணியின் முதல் படி குருவினிடம் கொள்ளும் நம்பிக்கை.

20. குருபக்தி யோகத்தின் சாரம் புனித வேதங்களில் தெளிந்த தேர்ச்சிபெற்றுப் பிரம்ம நிஷ்டையில் இருக்கும் குருவின் எண்ணங்கள், சொற்கள், செயல்கள் ஆகியவற்றில் (கண்ணை மூடிக்கொண்டு) முழுநம்பிக்கை கொள்ளுவதாகும்.

21. இந்த யுகத்தில் மிக உயர்ந்ததும் பயில்வதற்கு மிக எளிதும் ஆகிய யோகம் குருபக்தி யோகமே.

22. குருபக்தி யோக தத்துவத்தின் உச்சநிலை குருவை இறைவனுகக் காண்பதாகும்.

23. குருபக்தி யோக தத்துவத்தின் சாதனைப் பயிற்சியின் நோக்கங்கள் குருவையும் தன் இஷ்ட தெய்வத்தையும் ஒன்றென்று தெளிவதாகும்.

24. குருபக்தி யோகம் சொற்பொழிவுகளின் வாயிலாகவோ அஞ்சல் வழிக்கல்வி முறை வாயிலாகவோ கற்பிக்கப்படக்கூடிய திட்டம் அல்ல. சீடன் குருவின் கீழ்ப் பல்லாண்டுகள் வாழ்ந்து துறவு, ஒழுங்கு, பிரம்மச்சரியம் ஆகியவற்றைக் கடுமையாகப் பின்பற்றி ஆழ்ந்த தியானத்தைப் பயிலவேண்டும்.

25. அறிவியல் கலைகள் எல்லாவற்றுக்கும் அறிவியலாக விளங்குவது குருபக்தி யோகம்.

26. குருபக்தி யோகம் அமரத்துவம், முடிவற்ற பேரின்பம், சுதந்திரம், நிறைநிலை, நிலைபெற்ற மகிழ்ச்சி, நீடித்த அமைதி ஆகியவற்றை வழங்குகிறது.

27. குருபக்தி யோகப் பயிற்சி பற்றற்ற தன்மையையும் உலகியல் பொருள்களில் வெறுப்பையும், உண்டாக்கிக் கைவல்ய மோட்சத்தை நல்குகிறது.

28. குருபக்தி யோகப் பயிற்சி சீடனுக்கு ஆசைகளையும் உணர்வுகளையும் கட்டுப்படுத்தத் துணை செய்து, மயக்கங்களைத் தடுக்கும் ஆற்றலைத் தந்து, மனதில் உண்டாகும் தொந்தரவு அலைகளை நீக்கி, இருளின் மறுகரைக்குக் கொண்டு சேர்க்கும் குருவின் கருணையைப்பெறத் தகுதியுள்ளவனாக ஆக்குகிறது.

29. குருபக்தி யோகப் பயிற்சி அமரத்துவம், மேலான அமைதி, நிலைபெற்ற மகிழ்ச்சி ஆகியவற்றைத் தருகிறது.

30. குருபக்தி யோகப் பயிற்சி அச்சம், அறியாமை, வாழ்வில் அவநம்பிக்கை, மனக் குழப்பம், நோய், வருத்தம், கவலை ஆகியவற்றை வெற்றி கொள்ளும் வலிமையை உருவாக்குகிறது.

31. தனிப்பட்டவரின் விருப்பம், உணர்வு, அறிவு, தெளிவு ஆகியவற்றை முடிவற்ற பேருணர் வாக அமையுமாறு 'தான்' என்ற அகந்தையை மாற்றுவது குருபக்தி யோகம்.

32. குருபக்தி யோகத்தில் விதிக்கப்பட்டுள்ள சாதனைகள் மிகவும் சுலபசாத்தியமானவை; அச்ச மற்ற தன்மையின் மறுகரைக்குக் கொண்டு சேர்க்க வல்ல நிச்சயமான வழிகள்.

33. குருவின் கருணையால் அடைவதற்குரிய கண்டிப்பான ஓர் ஒழுங்கு முறையே குருபக்தி யோகம்.

34. குரு பக்தி யோக அமைப்பின் தத்துவத் தின் படி பலன் எதிர்பாராமல் செய்யும் குரு சேவை யும் குருவின் பாத தாமரைகளினிடம் என்றென்றும் பெருகிய வண்ணமாக இருக்கும் குரு பக்தியும் சாதனையின் பிரிக்க முடியாத பகுதிகளாகும்.

35. நீதி நெறி ஒழுக்கத்தில் நிறைநிலை பெறு மலும் குருவினிடம் பக்தி இல்லாமலும் குரு பக்தி யோகத்தைப் பயில்கின்றவன் குருவின் கருணைக்குப் பாத்திரமாக முடியாது.

36. கர்ம யோகம், பக்தி யோகம், ராஜ யோகம், ஹடயோகம் முதலான யோகங்கள் எல்லாவற்றுக்கும் குருபக்தி யோகந்தான் அடித் தளம்.

37. குருபக்தி யோக நெறியிலிருந்து மாறு பட்டவன் சாவிலிருந்து சாவுக்கும், இருளிலிருந்து இருளுக்கும், அறியாமையிலிருந்து அறியாமைக்கும் செல்கிறான்.

38. குருபக்தி யோகப் பயிற்சி வாழ்வின் மிக உயர்ந்த குறிக்கோளாகிய மெய்யுணர்வுக்குரிய தெளிந்த நிச்சயமான வழியில் செலுத்துகிறது.

39. குரு பக்தி யோகப் பயிற்சி ஒவ்வொரு வருக்கும் திறந்து வைக்கப்பட்டுள்ளது. உயர்ந்த

சான்றோர்களனைவரும், மிகப்பெரிய ஞானிகளனை வரும் குருபக்தி யோகப் பயிற்சியின் வாயிலாக மகத்தான பணிகளைச் செய்துள்ளனர்.

40. குருபக்தி யோகத்தில் மற்ற எல்லா யோகங்களும் அடங்கியுள்ளன. குருபக்தி யோகத்தின் உதவியை நாடாமல், மேற்கொள்ளக் கடினமாக இருக்கின்ற மற்ற யோகங்களை யாருமே பயில முடியாது.

41. குருபக்தி யோக இயக்கம் குருவை உபாசனை செய்வதன் வாயிலாகக் குரு கிருபையைப் பெறுவதற்கு மிகவும் முக்கியத்துவம் தருகிறது.

42. வேதகால உபநிஷத காலங்களைப் போல் குருபக்தி யோகமும் மிகவும் தொன்மை வாய்ந்தது.

43. வாழ்வின் எல்லாத் துயரங்களையும் வருத்தங்களையும் துடைத்தெறியும் வழியைக் குருபக்தி யோகம் கற்பிக்கிறது.

44. வாழ்வின் கேடுகள் யாவற்றுக்கும் குருபக்தி யோகம் ஒன்றே தவறாத கைகண்ட மருந்தாகும்.

45. தகுதிவாய்ந்த சீடருக்குத்தான் குருபக்தி யோக நெறி விரைவில் பலன் தருகிறது.

46. குருபக்தி யோகம் 'தான்' என்ற அகந்தையை அழிப்பதிலும், அமரத்துவப் பேரின்பத்தை அடைவதிலும் முடிகிறது.

47. குருபக்தி யோகமே மிகச்சிறந்த யோகம்.

48. சத் சங்கம் செய்யவும் குருவின் புனிதமான திருவடிகளில் பணிந்து வணங்கவும் கூச்சப்படுவது குருபக்தி யோகப் பயிற்சிக்குப் பெரிய தடையாகும்.

49. தன் நிறைவை மட்டும் தேடிக் கொள்ளல், தான் செய்வது நியாயம் என்று தானே பாராட்டிக் கொள்ளல், தற்பெருமை, தனக்கு மட்டும் என்று செய்தியை மறைத்துக் கொள்ளல், தன் கருத்தைத் தானே வலியுறுத்தல், கடமையைத்

தள்ளிப் போடல், பிடிவாதம், பிறரிடம் குற்றங் காணல், சிற்றினம் சேர்தல், நாணயம் இன்மை, வஞ்சகம், கர்வம், காமம், சினம், பேராசை, அகம்பாவம் இவையாவும் குருபக்தி யோக நெறியில் முட்டுக் கட்டைகளாகும்.

50. இடையருத குருபக்தி யோகப் பயிற்சியினுல் மனத்தின் அடிக்கடி மாறுபடும் தன்மையை நீக்க வேண்டும்.

51. குருபக்தி யோகப் பயிற்சியினுல், சிதறிச் செல்லும் மனத்தின் எண்ணக் கதிர்களை யெல்லாம் குவியுமாறு செய்யும் போது நீங்கள் அற்புதங்கள் பலவற்றை நிகழ்த்தலாம்.

52. மனத் தூய்மை பெறவும், தியானம் செய்யவும், மெய்யுணர்வு பெறவும் குரு சேவையையே பெரிதும் வற்புறுத்துகிறது, குருபக்தி யோக முறை.

53. உண்மையான சாதகன் குருபக்தி யோகப் பயிற்சியினுல் களிப்படைகிருன்.

54. முதலில் குருபக்தி யோகத் தத்துவத்தைப் புரிந்து கொள்ளுங்கள்; பின்னர் நடைமுறையில் பின்பற்றுங்கள். நீங்கள் வெற்றி பெறுவீர்கள்.

55. தீய பண்புகளனைத்தையும் வேருடன் களைந்தெறிவதற்குத் தகுந்த ஆற்றல் வாய்ந்த வழி குருபக்தி யோகத்தை நேர்மையுடன் பயிற்சி செய்வதாகும்.

56. குருபக்தி யோகம் என்னும் மரத்தின் வேர், குருவினிடம் முழு நம்பிக்கை கொள்வதாகும்.

57. நாள் தோறும் பெருகும் பக்தி, பணிவு, கீழ்ப்படிதல் முதலியன அம்மரத்தின் கிளைகள். சேவையே மலர்.

58. வாழ்வை உய்விக்கும் சத்குருவின் திருவடிகளில் உறுதியான நம்பிக்கையும் பக்தியும்

நீங்கள் கொண்டிருந்தால் குருபக்தி யோகப் பயிற்சியில் நீங்கள் கட்டாயம் வெற்றி பெறுவீர்கள்.

59. குருவினிடத்தில் உண்மையாகவும் நேர்மையாகவும் சரணுகதியடைவதே குருபக்தி யோகத்தின் சாரம்.

60. குருபக்தி யோகம் என்பது குருவினிடம் ஆழ்ந்த, தூய அன்பு கொள்வது என்று பொருள் படும்.

61. குருபக்தி யோகத்தில் முன்னேற்றம், நாணயமின்றிச் சாத்தியமில்லை.

62. பெருமை வாய்ந்த யோகி அல்லது வல்லவராக இருக்கும் குருவின் கீழ் உயர்தரமான ஆன்மீக அதிர்வுகளுடன் அமைதியான இடத்தில் வாழ். அவரிடம் குருபக்தி யோகப் பயிற்சியைப் பெறு. அதன்பின்னரே குருபக்தி யோகத்தில் நீ வெற்றி பெறுவாய்.

63. குருபக்தி யோகம் வற்புறுத்தும் கருத்து பிரம்ம நிஷ்டையடைந்த குருவின் பாத கமலங்களில் நிபந்தனையற்ற சரணுகதி புகுவதேயாகும்.

64. குருபக்தி யோக இயக்கத்தின்படி குருவும் கடவுளும் ஒருவரே; எனவே குருவினிடம் முழு அளவில் சரணுகதி புகுவதே மிகவும் முக்கியம்.

65. குருபக்தி யோக ஏணியின் நிச்சயமான மேலான படி குருவினிடம் சரணுகதியடைவதே யாகும்.

66. குருபக்தி யோகப் பயிற்சியை நிறைவு செய்வதற்கு வேண்டிய இன்றியமையாத நிபந்தனை குரு சேவையே யாகும்.

67. குருபக்தி யோகத்தின் முடிவு அல்லது குறிக்கோள் குரு கிருபை.

68. பிடிவாதமுள்ள மாணவன் குருபக்தி யோகப் பயிற்சியில் குறிப்பிடத்தக்க எந்த முன்னேற்றத்தையும் அடைய முடியாது.

69. குருபக்தி யோகப் பயிற்சியை விரும்பும் சீடனுக்குத் தீயவர் கூட்டுறவு ஒரு பகையாகும்.

70. குருபக்தி யோகத்தைப் பயில விரும்பினால் புலன் இன்ப வாழ்வைத் தவிர்க்க வேண்டும்.

71. வாழ்வில் துயரங்களை வெற்றி கொள்ளவும், மகிழ்வையும் களிப்பையும் அடையவும் ஒவ்வொருவரும் குருபக்தி யோகத்தை நேர்மையாகப் பயில வேண்டும்.

72. குரு சேவை யோகத்தின் உதவியை நாடுவோர் உண்மையான நிலையான மகிழ்ச்சியை அடைய முடியும். ஆனால் அது அழியக்கூடிய புறப் பொருள்களில் இல்லை.

73. பிறப்பு, இறப்பு; இன்ப துன்பம், மகிழ்ச்சி துயரம் ஆகிய முடிவற்ற சக்கரத்திலிருந்து தப்புவதற்கு வழியே இல்லையா? சீடனே, கேள். நிச்சயமான ஒரு வழி இருக்கிறது. அழியக்கூடிய புலன் இன்பப் பொருள்களிலிருந்து உன் மனத்தை அப்பால் திருப்பிக் குருசேவை யோகத்தின் உதவியை நாடு; அது உன்னை இரட்டைகளுக்கு அப்பால் கொண்டு போய்ச் சேர்க்கும்.

74. குருபக்தி யோகத்தின் உதவியை நாடும் போதுதான் ஒருவனுடைய உண்மையான வாழ்க்கை தொடங்குகிறது. அது தன்னைப் பயில்கின்றவனுக்கு இப்பிறப்பிலும் மறு பிறப்பிலும் நீடித்த இன்பத்தை வழங்குகிறது.

75. குருபக்தி யோகப் பயிற்சி அளக்க முடியாத அளவற்ற மகிழ்ச்சியைத் தருகிறது.

76. குருபக்தி யோகம், பயில்வோனுக்கு நீண்ட ஆயுளையும் முக்திப் பேரின்பத்தையும் வழங்குகிறது.

77. சம்சாரம் அல்லது உலகியல் நெறியின் வேரில் மனம் இருக்கிறது. பந்தம், விடுதலை, இன்ப துன்பங்களுக்கு மனமே காரணம். குருபக்தி

யோகப் பயிற்சியினுல் தான் மனத்தைக் கட்டுப் படுத்த முடியும்.

78. அமரத்துவம், முக்திப் பேரின்பம், முக்தி, நிறைநிலே, என்றென்றும் நிலேயான மகிழ்ச்சி, நீடித்த அமைதி ஆகியவற்றைக் குருபக்தி யோகம் வழங்குகிறது,

79. மேலான அமைதிக்கு வழி குருபக்தி யோகப் பயிற்சியிலிருந்து தொடங்குகிறது.

80. தன்னல மறுப்பு, துறவு, பிற யோகங் கள், தர்மம், புண்ணியச் செயல்கள் முதலிய வற்ருல் எவ்வெவற்றை அடையலாமோ அவற்றை யெல்லாம் குருபக்தி யோகப் பயிற்சியினுல் விரை வில் அடையலாம்.

81. கீழான இயல்பை வெற்றி கொண்டு மேலான பேரின்பத்தைப் பெறும் வழியைக் கற்பிக் கின்ற சரியான விஞ்ஞானமே குருபக்தி யோகம்.

82. குருசேவை யோகம் ஒரு தாழ்ந்த வகை யான யோகம் என்று சிலர் கருதுகின்றனர். ஆன் மீகத்தின் இரகசியத்தை அவர்கள் தவருகப் புரிந்து கொண்டுள்ளனர்.

83. குருபக்தி யோகம், குருசேவை யோகம், குரு சரண யோகம் முதலிய சொற்ருெடர்கள் யாவும் ஒரே பொருளேக் குறிக்கின்றன. அவை யாவும் ஒன்றேயாகும்.

84. யோகங்களின் அரசு குருபக்தி யோகம்.

85. இறைவனே உணர்வதற்கான சுலபமான, நிச்சயமான, விரைவான, மலிவான, பாதுகாப் பான வழி குருபக்தி யோகம். குருபக்தி யோகப் பயிற்சியின் வாயிலாக நீங்களனைவரும் இப்பிறவி யிலேயே இறைவனே உணர்வீர்களாக!

86. குருபக்தி யோகத்தின் உதவியை நாடி, இழந்த உங்கள் தெய்வீகத் தன்மையைப் பெறுவீர் களாக !

87. குருபக்தி யோகத்தைப் பயின்று இரட்டைகளுக்கும் துயரங்களுக்கும் காரணங்களாக உள்ள அனைத்தையும் கடந்து மேலே செல்வீர்களாக.

88. குருபக்தி யோகம், பயிற்சி பெறும் சீடனுக்கு, மேலான அமரத்துவம், மகிழ்ச்சி, அமைதி ஆகியவற்றை வழங்குகிறது.

89. காட்டில் வாழும் புலியை, சிங்கத்தை அல்லது யானையை வசமாக்குவது மிகவும் சுலபம். நெருப்பின் மீது அல்லது நீரின் மீது நடப்பது மிகவும் சுலபம். ஆனால் குருபக்தி யோகத்தைப் பயிலும் உண்மையான ஆர்வம் ஒருவனுக்கு இருந்தாலன்றிக் குருவின் பாத கமலங்களில் சரண் புகுவது மிகவும் கடினம்.

90. குருபக்தி யோகம் என்பது குருசேவை வாயிலாக மனத்தைக் கட்டுப் படுத்துவதும் பண்படுத்துவதுமாகும்.

91. குருவினிடம் முழுஅளவில் நிபந்தனையற்ற சரணாகதி புகுவதே குருபக்தியை அடைய நிச்சயமான வழியாகும்.

92. குருபக்தி யோகத்தின் அடித்தளம் குருவினிடம் கொள்ளும் முழுநம்பிக்கையின்மீது அமைக்கப்பட்டுள்ளது.

93. இறையருளைப்பெற நீங்கள் உண்மையாக விரும்பினால் உலகியல் களியாட்டங்களிலிருந்து திரும்பிக் குருபக்தி யோகப் பயிற்சியின் உதவியை நாடுங்கள்.

94. எவ்வகை இடையீடும் இன்றிக் குருபக்தி யோகத்தைத் தொடர்ச்சியாகப் பயிலுங்கள்.

95. வாழ்வின் எல்லாத் துறைகளிலும் அச்சமின்றி என்றும் மகிழ்ச்சியுள்ளவனாக ஒருவனை ஆக்கக் கூடியது குருபக்தி யோகப் பயிற்சி மட்டுந்தான்.

96. குருபக்தி யோகப் பயிற்சியின் வாயிலாக உள்ளுக்குள் இருக்கின்ற அமரத்துவப் பேரின்ப ஆத்மனைத் தேடுக.

97. குருபக்தி யோகத்தையே வாழ்வின் ஒரே பணி, குறிக்கோள், ஆர்வம் என்று கொள்ளுங்கள். நீங்கள் மேலான பேரின்பத்தை அடைவீர்கள்.

98. குருபக்தி யோகம் அறிவு அல்லது ஞானத்துக்கு உதவியாக இருப்பதாகும்.

99. குருபக்தி யோகத்தின் முதன்மையான குறிக்கோள் அடங்காத பொறி புலன்களையும் அலை கின்ற மனத்தையும் கட்டுப்படுத்துவதாகும்.

100. நிலையான பேரின்பத்துக்கும், இறை வனுடன் இரண்டறக் கலக்கின்ற ஐக்கிய சுகத்துக் கும் மனிதனை அழைத்துச் செல்கின்ற இந்துமதப் பண்பாட்டின் தொன்மைவாய்ந்த முறைகளில் ஒன்றே குருபக்தி யோகம்.

101. குருபக்தி யோகம் தன் முயற்சியால் ஏற்படுத்திக்கொள்ளும் ஆன்மீக மனவளர்ச்சி யாகும்.

102. உலகியல் பொருட் பிணிப்புக்களி லிருந்து மனிதனை விடுவித்துத் தெய்வீகப் பெருமை யும் அமரத்துவப் பேரின்பமுமான அவனுடைய யதார்த்த நிலைக்குத் திருப்பிக்கொண்டு வரவே குருபக்தி யோகம் முயல்கிறது.

103. குருபக்தி யோகப் பயிற்சி உடலையும் உள்ளத்தையும் குறைபாடுகளிலிருந்தும் நோய்களி லிருந்தும் விடுவிக்கிறது.

104. குருபக்தி யோகப் பயிற்சி உடல் வலிவையும் உள்ள வலிவையும் வழங்குகிறது.

105. குருபக்தி யோகப் பயிற்சி துன்பம், துயரம், முதுமை ஆகியவற்றிலிருந்து விடுவித்து நீண்ட ஆயுளையும் நீடித்த இன்பத்தையும் தருகிறது.

106. குருபக்தி யோகம் தன்னை வெற்றி கொள்ளவும் மெய்யுணர்வு பெறவும் துணை செய்கின்ற உடல், உள்ளம், அறம், ஆன்மீகம் ஆகியவற்றின் தொடர்பான ஒவ்வொரு ஒழுங்குப் பாட்டையும் உள்ளடக்கியதாகும்.

107. குருபக்தி யோகம் மனத்தின் வேகங்களை வெற்றிகொள்ளும் விஞ்ஞானமும் கலையும் ஆகும்.

108. நம்பிக்கை, பக்தி என்னும் மலர்களால் குருவை வழிபடுக.

109. மெய்யுணர்வு என்னும் கோயிலின் முதல் தூண் குருவினிடம் கொள்ளும் சத்சங்கமாகும்.

110. கடவுளின் கருணையே குருவின் வடிவைக் கொள்ளுகிறது.

111. குருவைக் காண்பதே இறைவனைக் காண்பதாகும்.

112. தெய்வீகக் குருவைக் காணுதவன் குருடனேயாவான்.

113. குருவை நேசிப்பதும் அவரிடம் பக்தி கொள்வதும் என்ற ஒரு மதத்தைத்தவிர வேறு மதம் எதுவும் இல்லை.

114. உலகியல் நம்பிக்கையை இழக்கும் போது புனித குருவினிடம் பக்தி தோன்றுகிறது.

115. ஆன்மீக குருவின் கூட்டுறவு உன் போராட்டத்தை எளிதாக்குகிறது.

116. குருவினிடம் நம்பிக்கைவைத்துச் சரியானதைச் செய்.

117. குருகிருபையின்மீது நம்பிக்கைக் கொண்டு உன் கடமையைச் செய்.

118. குருவுக்குக் கீழ்ப்படியாமை, உன் கல்லறையை நீயே வெட்டிக்கொள்ளுவதாகும்.

119. சத்குரு, சீடனுக்குத் தொடர்ந்து பெருகும் பேரின்பமாவார்.

120. ஜகத்குருவின் இதயம் அழகிய கோயி லாகும்.

121. வாழ்வின் குறிக்கோள் குருசேவை.

122. வாழ்வில் நிகழும் ஒவ்வொரு துன்ப நிகழ்ச்சியும் குருவினிடம் நீ கொண்டுள்ள நம்பிக் கையின் சோதனையாகும்.

123. சீடன் செயல்களைப்பற்றிச் சிந்திக் கின்றான்; குரு உன் எண்ணங்களையும் நோக்கங்களை யும் சீர்தூக்கிப் பார்க்கின்றார்.

124. குருவின் செயலைச் சந்தேகிப்பது மிகப் பெரிய பாவம்.

125. குருவின் முன்னிலையில் உன் உண்மை நிலைக்கு மாறாகப் பாசாங்கு செய்ய ஒருபோதும் முயற்சி செய்யவேண்டாம்.

126. கீழ்ப்படிவது சீடனின் வாழ்க்கைச் சட்டம்.

127. உன் புனித குருவுக்குச் சேவை செய்யும் எந்த ஒரு வாய்ப்பையும் தவறி விடாதே.

128. உன் புனித குருவுக்குச் சேவை செய்யும் போது நேர்மையாகவும் ஊக்கமாகவும் செய்.

129. குருவுக்குப் பணிவிடை செய்வதே குருவை நேசிப்பதாகும்.

130. வாழ்க்கை என்பது புனித குருவுக்குப் பணிவிடை செய்வதே.

131. குருவுக்கு வணக்கம் செய்வதைக் காட்டிலும் நல்லது அவருக்குக் கீழ்ப்படிவது.

132. குருவுக்குக் கீழ்ப்படிவது தியாகத்தைக் காட்டிலும் நல்லது.

133. எல்லாச் சூழ்நிலைகளிலும் குருவுடன் ஒத்துப்போ; இணங்கியிரு; உதவியாக இரு.

134. குருவின் முன்னிலையில் மிகைப்படப் பேசாதே.

135. குருவினிடம் கொள்ளும் உண்மையான அன்பு என்பது அவருக்கு உண்மையாகப் பணிந்து நடப்பதே.

136. மிக நல்ல பொருள்களை முதலில் குருவுக்குக் கொடு

137. சீடன், பொறாமை, அவநம்பிக்கை, அகம்பாவம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டுப் பற்றற்ற நிலையில் குருவினிடம் உறுதியான பக்தி பூண்டு பொறுமையுடன் மெய்யறிவு பெறுவதில் ஆவலுடன் இருக்கவேண்டும்.

138. சீடன் தன் குருவினிடமே குற்றம் சாட்டக் கூடாது.

139. சீடன் குருவின் முன்னிலையில் அனுவசியமான அல்லது பொழுது போக்கான பேச்சுக்கு இடந்தரக் கூடாது.

140. புனித வேள்வித் தீப்பற்றவைக்கும் மரத்துண்டுகளின் (அரணி) முக்கியமான அல்லது கீழே உள்ள துண்டாகக் குருவும், மேலே உள்ள துண்டாகச் சீடனும், இணைக்கும் துண்டாகப் (நடுப் பகுதி) போதனையும், பேரின்பம்தரும் ஐக்கியமாக மெய்யறிவும் பாவிக்கப்படவேண்டும்.

141. குருவினிடம் இவ்வாறு பெறும் தூய மெய்ஞ்ஞானம் மாயையை அல்லது ஏமாற்றும் தோற்றத்தை நீக்குகிறது.

142. இறைவன் ஒருவனே மாயையினால் பலராகத் தென்படுகிறான் என்று குருவின் ஆதரவினால் தெரிந்துகொள்பவன் மெய்யறிவு பெறுகிறான்; வேதங்களைப் புரிந்துகொள்ளுகிறான்.

143. அமைதியாகவும் உறுதியாகவும் குருவுக்குச் செய்யும் சேவையினாலும் வழிபாட்டினாலும் அடைகின்ற ஒருமுகப்பட்ட பக்தியினால் கூர்தீட்டப் பெற்ற அறிவென்னும் கோடரியினால் சம்சாரம் என்னும் மரத்தை வெட்டி வீழ்த்து.

144. வாழ்க்கைப் படகின் சுக்கான், குரு; அதைச் செலுத்தும் ஆதரவான காற்று, இறைவன்.

145. ஒருவன் உலகின்பால் வெறுப்புற்றுப் பற்றற்ற தன்மையை அடையும்போது, குரு போதித்ததை நினைவுகூர்ந்து சிந்திக்கமுடியும் போது, தியானத்தில் மீண்டும் மீண்டும் மேற் கொள்ளும் பயிற்சியின் இயல்பினுல் அவனது மனம் தீய இயல்புகளைக் களைத்தெறிகிறது.

146. மந்திரத்தின் தூய்மை, குருவினிடம் முறையாகத் தெரிந்துகொள்ளும்போது தோன்று கிறது.

147. மனிதன் அறுதியான அறியாமையில் மூழ்கியிருப்பதனுல் குரு இல்லாமல் மெய்யுணர்வு பெற அவனுல் முடியாது. பிரம்மத்தை அறிந்தவரே பிரம்ம ஞானத்தை வழங்க முடியும்.

148. அறிவுள்ளவன் குரு இறைவனுகவும் ஆத்மனுகவும் இருப்பதை அறிந்துகொண்டு தளராத பக்தியுடன் தன் குருவை வழிபட வேண்டும்.

149. குருவினிடமும் இறைவனிடமும் சீடன் நேர்மையான பக்தி கொள்ளவேண்டும்.

150. சீடன் குருவினிடம் பணிவோடும் கருத் தோடும் நேர்மையோடும் பணிவிடை செய்து அவர் பால் பாகவத தர்மத்தை அல்லது இறைவனுடைய பக்தர்களின் கடமைகளைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

151. சீடன் குருவை இறைவனுகக் கருதிச் சேவைசெய்ய வேண்டும்; அதுவே அண்டங்களின் நாயகனுகிய இறைவனை மகிழ்வித்து அவன் கருணை யைப்பெறத் தகுதியுள்ளவனுக ஆவதற்கு நிச்சய மான வழி.

152. சீடன் பற்றற்ற தன்மையைப் பயின்று புனித குருவின் கூட்டுறவிலேயே இருக்கவேண்டும்.

153. சீடன் முதலில் குருவின் கிருபையைப் பெற்று அவர் காட்டிய வழியில் பின்பற்றிச் செல்ல வேண்டும்.

154. சீடன் குருவின் இல்லத்தில் புலன்களைக் கட்டுப்படுத்தி வாழ்ந்து வேதங்களைப் பயில வேண்டும்.

155. சீடன் குருவின் புனிதமான கையிலிருந்து பெறும் உணவு, சத்துள்ளதாயினும், சத்தற்றதாயினும், புதியதாயினும், பழையதாயினும், மிகையானதாயினும் குறைந்த அளவினதாயினும் உண்ணவேண்டும்.

156. மனத்தின் கீழ்த்தரமான இயல்பை முற்றிலும் சீர்படுத்தவேண்டும். சாதகன் குருவினிடம், ''நான் யோகம் பயில விரும்புகிறேன். நிர்விகல்ப சமாதியடைய விரும்புகிறேன். தங்கள் காலடியில் அமர விரும்புகிறேன். தங்களிடம் சரணுகதி அடைந்துள்ளேன்'' என்று கூறுகிருன். ஆனுல் அவன் தன்னுடைய கீழ்த்தரமான இயல்பையும் பழக்கங்களையும் பழைய நடத்தையையும் சுபாவத்தையும் ஒழுக்கத்தையும் மாற்றிக்கொள்ள விரும்புவதில்லை.

157. கீழ்த்தரமான இயல்பின் இம்மாற்றம் எளிதில் நிகழ்வதில்லை. பழக்கத்தின் வேகம் என்றும் வலிவுள்ளதாகவும் வேரூன்றியதாகவும் உள்ளது. அதற்கு மிகுந்த மனுேவலிமை தேவைப்படுகிறது. சாதகன் அடிக்கடி பழைய பழக்கங்களின் வேகத்திற்கு எதிரே சக்தியற்ற தன்னுடைய தன்மையை உணர்கிருன். அவன் குறிப்பிட்ட அளவு சாத்வீக குணத்தையும் மனுேவலிமையையும், ஒழுங்கு தவருத ஜபம், கீர்த்தனை, தியானம், சலிப்பற்ற தன்னலமற்ற சேவை, சத்சங்கம் ஆகியவற்ருல் வளர்த்துக்கொள்ள வேண்டும். அவன் தற்சோதனை செய்து தன் குறைபாடுகளையும் பலவீனங்களையும் கண்டுகொள்ள வேண்டும். குரு அவனுடைய குறை

பாடுகளைக் கண்டறிந்து அவற்றை நீக்கும் வழிகளைச் சுட்டிக் காட்டுகின்றார்.

158. முக்தியடைவதற்குரிய நான்கு சாதனங்களையும் கைவரப் பெற்றபின்பே நீ பிரம்ம சுரோத்திரியான பிரம்மநிஷ்டை வாய்ந்த குருவை அணுக வேண்டும். உன் சந்தேகங்களை நீ போக்கிக்கொள்ள வேண்டும். குரு வழங்கும் ஆன்மீக ஒளியின் உதவியால் நீ ஆன்மீக நெறியில் நடக்க வேண்டும். நீ தகுந்தவாறு உருவாக்கப்படும் வரையில் நீ அவருடன் வாழவேண்டும். மெய்யுணர்வு பெற்ற ஒருவரோடு நேரடியாகக் கொள்ளும் தொடர்பு நம்மை மிகவும் உயரச் செய்வதாகும்.

நீ நேர்மையும், ஆர்வமும் உள்ளவனாக இருந்தால், முக்தியடையத் தணியாத விருப்பம் கொண்டிருந்தால், குருவின் போதனைகளைக் கண்டிப்புடன் பின் பற்றினால், நிலையான ஆழ்ந்த தியானம் செய்தால் ஆறே மாதங்களில் நீ மிகஉயர்ந்த இலட்சியத்தை அடைந்து விடுவாய் என்பதில் சிறிதும் சந்தேகம் கிடையாது. என் வார்த்தையை நம்பு. அது நிச்சயம் நடைபெறும்.

159. உலகம் மயக்கங்கள் நிறைந்தது. எனவே புதிய சாதகர்கள் விழிப்புடன் தங்களைத் தற்காத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் முழுமையாக உருவாக்கப் படும்வரை, ஆழ்ந்த தியானத்தில் நிலை பெறும்வரை குருவின் பாத கமலங்களில் தங்கியிருக்க வேண்டும். மனம் போன போக்கில் மகிழ்ச்சியை நாடும் சாதகர்கள் தொடக்கத்தில் கட்டுப்பாடற்றவர்களாக இருந்து குருவின் வார்த்தைகளை உதாசீனம் செய்து கதியற்றுப் போகிறவர்களுக்கு உதாரணங்களாக விளங்குகிறார்கள். அவர்கள் குறிக்கோள் இல்லாமல் வாழ்ந்து ஆற்றில் மிதக்கும் பலகைத் துண்டு போல் இங்குமங்கும் அலைக்கழிக்கப்படுகிறார்கள்.

160. பிடிவாதமுள்ள சீடன் தன் பழைய பழக்கங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுகிறான். இறைவனிடமோ அல்லது தன் நேரடியான குருவினிடமோ அவன் சரண் புகுவதில்லை.

161. சீடன் முன்னேற்றம் பெற உண்மையாக விரும்பினால் அவன் வெளிப்படையாகத் தன்னிடமும் நேரடியாகக் குருவினிடமும் நடந்து கொள்ள வேண்டும்.

162. கீழ்ப் படியாதவன், கட்டுப்பாட்டை மீறுகிறவன், குருவினிடம் நேர்முகமாக நடந்து கொள்ளாதவன், குருவினிடம் அல்லது ஆன்மீக வழிகாட்டியினிடம் தன் மனந்திறந்து பேச முடியாதவன், குருவின் உதவியால் நன்மை அடைய முடியாது. தானே படைத்துக் கொண்ட சேற்றில் அல்லது சகதியில் அழுத்தப் பெற்றவனாய்க் கிடக்கின்ற அவனால் தெய்வீக நெறியில் முன்னேற முடியாது. அந்தோ பரிதாபம்! உண்மையில் அவனது நிலைமை மிகவும் இரங்கத்தக்கது.

163. சீடன் குருவினிடம் முணுமுணுக்காமல், சிறிதும் தயங்காமல், முழு அளவில் சரணாகதி அடைய வேண்டும்.

164. குரு செய்யக் கூடியதெல்லாம் உள்ளுணர்வை மலரச் செய்யும் பாதையை அல்லது மெய்யறிவு பெறும் வழியைத் தெரிவிப்பதுதான்.

165. முக்திக்குரிய சாதனங்கள் நான்கும் கைவரப் பெற்ற சாதகன் சுருதிகளையும், 'தத்துவ மஸி' வாக்கியத்தின் உட் குறிப்பையும், குருவின் காலடியிலமர்ந்து செவிமடுத்தபின், தான் கேட்டதைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்கின்றான்.

166. ஹரி, ஹரன், கிருஷ்ணன், உன் குரு அல்லது புத்தர் அல்லது ஏசுபிரானைப் போன்ற முனிவர் ஒருவருடைய வடிவின் மீது மனத்தை நிலைநாட்டு. படத்தின் இந்த வடிவத்தை நினைவுக்குக் கொண்டுவர மீண்டும் மீண்டும் முயற்சி செய்.

எண்ணங்கள் யாவும் மடியும். இது பக்தர்கள் பின் பற்றுகின்ற இன்னொரு முறையாகும்.

167. கீழ்ப்படிதல் விலை மதிக்க முடியாத சிறந்த குணம்; ஏனெனில் கீழ்ப்படிதலாகிய நற் குணத்தை வளர்க்க நீ முயன்றால், மெய்யுணர்வுப் பாதையில் குறுக்கிடுகின்ற முக்கியமான பகைவ னாகிய அகந்தை மெதுவாக வேருடன் களைந்தெறியப் படுகிறது.

168. குருவுக்கு முழு அளவில் கீழ்ப்படிதல் கடினமான ஒரு பணி; எனினும் நேர்மையாக முயன்றால் அது சுலபமாகின்றது.

169. எளிய செயலை நிறைவேற்றக் கூட மிகுந்த வருத்தத்தை அனுபவிக்க வேண்டியிருக் கிறது; ஆகையால் ஆன்மீகப் பாதையில் கட்டுப் பாட்டுக்குத் தன்னை உட்படுத்த ஒருவன் தயாராக இருந்து குருவினிடம் கீழ்ப்படிந்திருப்பதை வளர்த் துக் கொள்ள வேண்டும்.

170. குருவை வணங்குவதும் துதிப்பதும் ஆகிய உள்ளுணர் பாவனையை வெளிப்படையாகக் காட்டக் கூடிய வழிபாடு செய்தல், மாலை அணி வித்தல் முதலிய செய்கைகளைக் காட்டிலும் மிகமிக மேலானது குருவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாகும்.

171. குருவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பது அவரிடம் கொண்டுள்ள உண்மையான வழிபாட்டு அன்பைக் காட்டுவதாகும்.

172. எப்படிச் செய்தால் குரு மகிழ்ச்சியடை வாரோ அப்படி அந்த வழியில் செயலைச் செய்ய முயல்வதே கீழ்ப்படிதல் என்பதன் பொருளாகும்.

173. குறிப்பிட்ட செயலைக் குரு விரும்ப மாட்டார் என்று கண்டு கொண்டால் அச்செயலைச் செய்யக் கூடாது. இதுவும் கீழ்ப்படிதலாகும்.

174. குரு சேவை யோகம் என்பது குருவுக் குச் செய்யும் தன்னலமற்ற பணிவிடை யோக மாகும்.

175. குருவுக்குச் செய்யும் சேவை மனித சமுதாயத்திற்குச் செய்யும் சேவையாகும்.

176. குரு சேவை மன அழுக்கை நீக்குகிறது. இதயத்தைத் தூய்மைப் படுத்தும் சக்தியுள்ள சாதனம் அது. எனவே குருவுக்குப் பாவனையோடும் உணர்வோடும் சேவை செய்க.

177. குருவுக்குச் செய்யும் சேவை தெய்வீக ஒளியையும் மெய்யறிவையும் பெருங் கருணையையும் மனம் அடைவதற்கு அதைத் தயார் செய்கிறது.

178. குரு சேவை மன எல்லைகளை விரிவாக்கித் தடைகளை உடைத்தெறிகிறது.

179. குரு சேவை மனத்தை எப்போதும் சக்தியுள்ளதாகவும் விழிப்புள்ளதாகவும் வைத்திருக் கிறது.

180. குரு சேவை ஒருவனுக்குக் கருணை, பணிவு, கீழ்ப்படிதல், அன்பு, நம்பிக்கை, பக்தி, பொறுமை, தியாகம் முதலிய நல்ல குணங்களை வளர்த்துக்கொள்ள உதவுகிறது.

181. குரு சேவை பொறாமை, பகைமை, தன்னை உயர்வாகக் கருதல் ஆகியவற்றை அழித்து விடுகிறது.

182. குருவுக்குச் சேவை செய்பவன் 'நான்', 'எனது' என்பவற்றை வெற்றிகொள்ளுகிறான்.

183. குருவுக்குச் சேவை செய்யும் சீடன் உண்மையில் தனக்குச் சேவை செய்து கொள்ளு கிறான்.

184. குரு சேவை என்னும் யோகப் பயிற்சி யில் வர்ணிக்க முடியாத மகிழ்ச்சியும் அமைதியும் உள்ளன.

185. குரு சேவை செய்வதற்காகவே வாழ வேண்டும்.

186. வைகறையில் 4 மணிக்குத் துயில் நீத்தெழ வேண்டும். குரு வடிவைத் தியானம் செய்ய இந்த நேரம் அனுகூலமானது.

187. குருவின் இல்லத்தில் வசிக்கும் சீடன் மனத்திருப்தியுடன் வாழ வேண்டும். முற்றிலும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டும் இருக்க வேண்டும்.

188. குருவின் முன்னிலையில் சீடன் மெது வாகவும் இனிமையாகவும் உண்மையாகவும் பேச வேண்டும். பண்பாடற்ற அல்லது கடுமையான சொற்களை அவன் பேசக்கூடாது.

189. சீடன் குருவைப் பற்றிக் கோள் சொல் லக் கூடாது.

190. குருவைப் பற்றிக் கோள் சொல்லுபவன் ரௌரவ நரகத்திற்குச் செல்லுகிறான்.

191. உண்பதற்காக வாழ்பவன் பாவி; ஆனால் குருவுக்குச் சேவை செய்வதற்காக உண்ப வன், உண்மையான சீடன்.

192. குருவைப் பற்றித் தியானம் செய்ப வனுக்கு மிகக் குறைந்த அளவு உணவு போது மானது.

193. குரு சேவை செய்யாமல் புனித மறை களை ஓதுவது காலத்தை வீணாக்குவதாகும்.

194. குரு தக்ஷிணை தராமல் குருவினிடம் புனித வேதங்களைப் பயில்வது காலத்தை வீணாக்கு வதாகும்.

195. குருவின் விருப்பங்களை நிறைவேற்றாமல் வேதாந்த பாடங்களையும், உபநிஷதங்களையும், பிரம்ம சூத்திரங்களையும் படிப்பது மட்டும், நலத் தையோ ஞானத்தையோ தராது.

196. நீண்டகாலம் சேவை செய்த பின்னர், தூய்மையான அமைதியான உங்கள் மனமே உங்களின் குருவாகிறது.

197. நீ விரும்பும் அளவுக்குத் தத்துவ நூல் களைப் படி; உலகப் பயணம் செய்து சொற்பொழிவு களை வழங்கு; ஆயிரக் கணக்கான ஆண்டுகள் இமாலயக் குகைகளில் தங்கியிரு; பல்லாண்டுக்

காலம் பிராணுயாமப் பயிற்சி செய்; ஆயுள் முழுதும் சிரசாசனம் செய்; ஆனுல் குரு கிருபை இல்லாமல் நீ முக்தி அடைய இயலாது.

198. ஆன்மீக குருவினுல் பிரம்மத்தை இது அல்லது அது என்று சுட்டிக்காட்ட முடியாது; சீடனும் தன் நேரிடை அனுபவத்துக்கு முந்தின நிலையில், பிரம்மம் எப்படி உள்ளது என்று அறிந்து கொள்ள முடியாது; என்ருலும் குரு கிருபை தானே ஒரு மர்மமான முறையில் சீடன் பிரம்மத்தின் இயல்பை நேரடியாகக் காணுமாறு செய்கிறது.

199. உன் தாய், தந்தை, முன்ஞேர்கள் உனக்குக் குருவாக இருக்கட்டும்.

200. குரு இசைவு தந்தால் அவருடைய திருவடிகளை மஞ்சன நீராட்டி மகிழ்.

201. குருவின் உதவியால் ஒவ்வொருவரும் தம்முள் உள்ள ஆன்மாவைத் தத்தம் ஞானத்தால் அறிய வேண்டும்; வேதாந்த பாடங்களின் உண்மையான உட்கருத்துக்களின் அறிவையும் பெற வேண்டும்.

202. குரு அல்லது ஆன்மீக போதகர் ஒருவருக்கு வாய்த்தாலும் அவர் தம்முடைய சொந்த முயற்சிகளால்தான் எல்லா விருப்பங்களையும், வாசனைகளையும், தான் என்ற அகந்தையையும் அழித்து மெய்யுணர்வைப் பெற வேண்டும்.

203. குருவை அணுகுவதற்கு நீ தகுந்த அதிகாரியாக இருக்க வேண்டும். வைராக்கியம், விவேகம், அமைதி, தன்னடக்கம், யமம் ஆகியவை உன்னிடம் இருக்க வேண்டும்.

204. 'நல்ல குரு யாரும் இல்லை' என்று நீ சொன்னுல், குருவும் 'நல்ல சீடர் யாரும் இல்லை' என்று கூறுகின்ருர். சீடஞக ஆவதற்கேற்ற தகுதிகளை நீ வளர்த்துக்கொள். சத்குரு ஒருவரை நீ அடைவாய்.

205. குரு உன்னை விடுவிப்பவர்; பாது காவலர். எப்போதும் அவரைத் தொழுவாய்; வணங்குவாய்.

206. குரு பீடம் ஓர் ஆபத்தான சாபத் தீடு.

207. சச்சிதானந்தமாக உள்ள குருவின் முன்னால் நாள்தோறும் பணிந்து வணங்கு.

208. சீடன் எந்நேரமும் தன் குருவின் வடிவத்தை நினைவில் கொள்ள வேண்டும்; எந்நேரமும் குருவின் புனித நாமத்தை உச்சரிக்க வேண்டும்; அவருடைய ஆணைகளை நிறைவேற்ற வேண்டும்; அவரைத் தவிர வேறு எதைப்பற்றியும் சிந்திக்கக் கூடாது. சாதனை ரகசியம் இதில்தான் அடங்கியுள்ளது.

209. குருவைக் காட்டிலும் பெரியது எதுவும் இல்லை; ஆதலால் ஒருவன் தன் குருவை வணங்க வேண்டும்.

210. குருவின் சரணம்ருதம் சம்சாரக் கடலை வற்றச் செய்து முக்கியமான ஆன்மீகச் செல்வத்தைப் பெறச் செய்கிறது.

211. குருவின் சரணம்ருதம் சீடனின் தாகத்தைத் தணிக்கிறது.

212. தியானத்தில் அமரும் போது உன் குருவையும், எல்லா ஞானிகளையும் நினைவு கூர்க. அவர்களுடைய நல்லாசிகளை நீ பெறுவாய்.

213. பெரிய ஞானிகளின் ஞான வாக்குகளைக் கேட்டு அவற்றைப் பின்பற்றுவாயாக.

214. சாஸ்திரங்களும் குருவும் சரியானவை என்று தெரிவிக்கும் செயல்களைச் செய்க.

215. அமைதிக்குரிய வழியைக் காட்டுவதற்குக் குரு முற்றிலும் அவசியமாக இருக்கிறார்.

216. குருநானக்கைப் பின்பற்றுவோருக்குரிய குருமந்திரம் ‘வாஹே குரு’ என்பதாம். ‘கிரந்த சாஹிப்’ நூலைப் படி. குருவின் மகிமையை நீ தெரிந்து கொள்ளுவாய்.

217. குருவை வழிபடுவதால் எப்போதும் அவரை நினைவில் வைத்திரு; நீ மகிழ்ச்சியடைவாய்.

218. சிரத்தை என்பது வேதங்களிலும், குருவின் வார்த்தைகளிலும், இறைவனைப் பற்றியும், தன்னைப் பற்றியும் கொள்ளும் நம்பிக்கையாகும்.

219. பலன் கருதாமல் குருவுக்குச் சேவை செய்வதே மிகப்பெரிய சாதனையாகும்.

220. சத்குருவின் பாத கமலங்களின் அடியில் அமர்ந்து சுருதிகளைக் கேட்பதே சிரவணமாகும்.

221. குருசேவை, தூய்மைப்படுத்தும் மிகப் பெரிய சாதனமாகும்.

222. குருகிருபை மெய்யுணர்வு பெறுவதற்கு அவசியமாக இருக்கிறது.

223. இறைவனிடம் கொண்டுள்ள அளவு குருவினிடம் பக்தி கொள். அப்போதுதான் உண்மை உனக்குப் புலப்படும்.

224. எல்லாக் காலங்களிலும் ஒரே குருவைச் சிக்கெனப் பிடித்துக்கொள்.

225. இடத்தாலும் காலத்தாலும் அளவு படாத ஆதி குரு இறைவன். அந்தமில்லாத காலங் காலமாக அவர் மனித இனத்தின் குருவாக இருக்கிறார்.

226. உறங்கும் நிலையில் உள்ள குண்டலினி சக்தியை எழுப்புவதற்குக் குரு முற்றிலும் அவசியமாக இருக்கிறார்.

227. 'தான்' என்ற அகந்தையை அழிப்பதே சீடனாக இருப்பதன் தொடக்கமாகும்.

228. சீடனாக ஆவதற்குரிய வழி பிரம்மச்சரியமும் குரு சேவையுமாகும்.

229. சீடத்துவத்தின் சீருடை குருபக்தியே.

230. சீடத்துவத்தின் அடையாளம் குருவின் பாத கமலங்களில் தன் வாழ்வை அர்ப்பணிப்பதே.

231. சீடத்துவத்துக்குரிய ராஜபாட்டை குரு வடிவை ஒழுங்காகத் தியானம் செய்வதே.

232. சீடத்துவத்தின் அடித்தளம் குரு மகராஜுக்கு முற்றிலும் கீழ்ப்படிவதாகும்.

233. முமுட்சுத்துவம் என்பது குருவைச் சந்திக்கவும் அவருக்குச் சேவை செய்யவும் ஏற்படுகின்ற தணியாத ஆவலாகும்.

234. கடவுளரை, இருபிறப்பாளரை, ஆன்மீகக் குருமார்களை, ஞானிகளை வணங்குவது, மனத் தூய்மை, கபடமின்மை, பிரம்மச்சரியம், அகிம்சை ஆகியவை உடம்பால் செய்யும் கடுந்தவமாகும்.

235. பிராம்மணர்கள், புனித போதகர்கள், ஞானிகள் ஆகியோரைப் பணிந்து வணங்குவது, பிரம்மச்சரியம், அகிம்சை ஆகியவை உடம்பால் செய்யும் தவமாகின்றன.

236. பெற்றோர்க்கும், குருவுக்கும், ஏழைகளுக்கும் நோயாளிகளுக்கும் செய்யும் சேவையும் உடம்பால் செய்யும் கடுந்தவமாகும்.

237. குருவின் இயல்பு எதுவாக இருப்பினும் அவரோடு பொருந்திச் செய்கின்ற அல்லது ஒத்துச் செல்கின்ற மனப்பான்மை அரிய ஒரு குணம் அல்லது சிறந்த பண்பாகும். அனுசரித்துப் போவது என்பது இதுவே.

238. இக்காலத்தில் பெரும்பாலான சாதகர்கள் தங்கள் குருமார்களுடன் ஒத்துச்செல்லவோ அல்லது விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையுடன் நடக்கவோ அறிவதில்லை.

239. சீடன் குருவுடன் ஒத்துச் செல்லவும் இணங்கிச் செல்லவும் அறிந்திருக்க வேண்டும்.

240. குருபக்தி வளர்ச்சிக்குப் பணிவும் கீழ்ப்படிதலும் அவசியமாக இருக்கின்றன.

241. ஒரே குருவின் கீழ் வாழ்கின்ற சக சீடர்களுடன் ஒத்துப்போக ஒரு சீடனுக்குத் தெரியாமல் போகும் போது மோதல் ஏற்பட்டுக் குருவுக்கு அதிருப்தியை விளைவிக்கிறான்.

242. கப்பல் தலைவன் எப்போதும் விழிப்புடன் இருக்கிறான். செம்படவன் எப்போதும் விழிப்புடன் இருக்கிறான். ரண சிகிச்சை செய்யும் கூடத்தில் மருத்துவர் எப்போதும் விழிப்புடன் இருக்கிறார். அதுபோலவே தாகம் மிகுந்த, பசியுள்ள சீடன் குரு சேவையில் எந்நேரமும் விழிப்புடன் இருக்க வேண்டும்.

243. தூங்கி விழுகின்ற, மந்த புத்தியுள்ள சோகம் நிறைந்த, சுறுசுறுப்பற்ற, சோம்பேறித்தனமுள்ள, முட்டாள் தனமுள்ள சீடன், குருவின மனம் மகிழுமாறு சேவை செய்ய முடியாது.

244. மன ஒருமைப்பாடு மிகுந்த சீடன் குரு சேவையில் வெற்றி பெறுகிறான். செல்வமும் அமரத்துவமும் அவனுடைய பணியாட்கள்.

245. குருசேவை செய்யச் சீடனுக்குத் தணியாத அவா அல்லது ஆசை இருக்க வேண்டும்.

246. குருபக்தியே மக்கள் இனம் அனைவர்க்கும் உரிய சரியான ஆசைகளின் ஒரே உண்மையான குறிக்கோள்.

247. குருவினிடம் பாடம் கேட்கும் போது சீடனுக்குக் கூர்மையான செவி இருக்க வேண்டும்; குருவுக்குச் சேவை செய்யும் போது கூர்மையான பார்வை இருக்க வேண்டும்.

248. குரு, பெற்றோர், மூத்தோர், ஞானிகள், சாதுக்கள் ஆகிய அனைவரிடமும் நல்ல பண்புடன் நடந்து கொள்ள வேண்டும்.

249. நல்ல பண்புடன் நடந்து கொள்வது என்பது குருவை அனுசரித்து ஒழுகும் ஒழுக்கமேயாகும்.

250. சீடனுடைய நடத்தையைக்கொண்டு அவனுடைய சுபாவத்தையும் மன இயல்பையும் குரு அறிந்து கொள்ளுகிறார்.

251. புனித குருவினிடம் நல்ல பண்புடன் நடந்துகொள்வது பேரின்ப வீட்டுக்குச் செல்ல அனுமதிச் சீட்டு ஆகும்,

252. சீடன் குருவுக்குச் சேவை செய்யும் போது மனம் அடிக்கடி மாறுவது கூடாது.

253. நன்னடத்தை என்பது குருசேவை யிலிருந்து பெறும் அனுபவ ஞானத்தின் புலப்பாடு ஆகும்.

254. தெய்வீகக் குணங்களையும் நல்ல பண்பு களையும் கடைகளில் வாங்கமுடியாது. நீண்டகால நம்பிக்கை, பக்தி, குருசேவை ஆகியவற்றின் வாயி லாக இவற்றைப் பெறலாம்.

255. உயர் ஞானமும் பெருஞ் செல்வமும் பெற்ற மனிதனாக நீ இருப்பினும் குருவின் முன்னிலை யிலும் சான்றோர்களின் முன்னிலையிலும் நீ மிகவும் பணிவுடன் இருக்கவேண்டும்.

256. சீடன் படிப்பில்லாதவனாக இருப்பினும் பணிவின் உருவமாக இருப்பின் குருவின் பேரன் புக்குப் பாத்திரமாகிறான்.

257. குழாயில் தண்ணீரைப் பருக விரும் பினால், நீ குனிந்துதானாகவேண்டும். அதுபோலவே குருவின் திருவாய் மலரிலிருந்து பாயும் அமரத்துவ ஆன்மீக அமுத தாரையைப் பருக விரும்பினால், நீ பணிவும் சாதுவான தன்மையும் ஒருங்கிணைந்த உருவமாக இருக்கவேண்டும்.

258. முற்றிலும் பணிவாகவும் நம்பிக்கை யோடும் குருவினிடம் உணர்வு பூர்வமாக இருப் பவர்களின்மீது குருகிருபை இறங்குகிறது.

259. குருவின் பாதகமலங்களில் அர்ச்சித்து வழிபடுவதற்குப் பணிவுடைமையைக் காட்டிலும் சிறந்த மலர் எதுவும் இல்லை.

260. நம்பிக்கை என்பது குருவினிடம் தைரியமாக இருப்பதும் தன்னை ஒப்படைப்பது மாகும்.

261. நம்பிக்கை என்பது பெரிய ஞானிகளும் தன் புனித குருவும் அறிவிப்பன, பேசுவன, செய்வன, எழுதுவன, போதிப்பன ஆகியவற்றை நம்புவதாகும்.

262. வேறு சான்று அல்லது நிருபணம் எதுவும் இன்றி அதிகார பூர்வமாகவோ உறுதி மொழியாகவோ குரு பறைசாற்றும் உண்மையில் ஆழ்ந்த திட நம்பிக்கை கொள்வதே, நம்பிக்கையாகும்.

263. குருவினிடம் பூரணமான நம்பிக்கை கொண்டு உன்னை முழுவதுமாக அவரிடம் அடைக்கலம் சேர். அவர் உன்னைப் பற்றிய பொறுப்பை மேற்கொள்ளுவார். அச்சம், தடைகள், துன்பங்கள் அனைத்தும் முற்றிலும் மறைந்து விடும்.

264. சத் குருவினிடம் கொள்ளும் ஆழ்ந்த நம்பிக்கை உள்ளத்தை உயர்த்துகிறது; இதயத்தைப் பரிசுத்தப் படுத்துகிறது; மெய்யுணர்வை அடைவதற்கான வழியில் அழைத்துச் செல்கிறது.

265. குருவின் உபதேசங்களில் ஆழ்ந்த நம்பிக்கை கொள்வதே சீடனுடைய குறிக்கோளாக இருக்க வேண்டும்.

266. கீழ்ப்படிதல் என்பது மூத்தோரும் குருவும் இடும் கட்டளைகளுக்கு விருப்பத்தோடு கீழ்ப்படிவதே.

267. குருவுக்குக் கீழ்ப்படியும் சீடனே தன் கீழான இயல்பை வெற்றி கொள்ள முடியும்.

268. குருவுக்குக் கீழ்ப்படிதலாகிய குணத்திலிருந்து பணிவு, பக்தி, அகந்தையற்ற தன்மை முதலிய தெய்வீக குணங்கள் உதிக்கின்றன.

269. குருவுக்கு உண்மையாகக் கீழ்ப்படிதல் என்ற குணம் காலத் தாழ்வு செய்வதில்லை; வினைகளையும் கேட்பதில்லை.

270. குருவுக்குக் கீழ்ப்படிதலே எல்லா முயற்சிகளிலும் வெற்றி தரும் தாய்.

271. குருவுக்கு உண்மையாகக் கீழ்ப்படிதல் என்பது அவர் விதித்தவற்றை நிறைவேற்றுவதும் அவர் விலக்கியவற்றைத் தவிர்ப்பதும் ஆகும்.

272. கபடமுள்ள சீடன் குருவுக்கு அச்சத்தினுல் கீழ்ப்படிகிருன். உண்மையான சீடன் குருவுக்குத் தூய அன்பினுல், அன்பின் பொருட்டே கீழ்ப்படிகிருன்.

273. சீடன் கற்றுக் கொள்ளும் முதற் பாடம் குருவுக்குக் கீழ்ப்படிவதாக இருக்கட்டும்.

274. குருவுக்குக் கீழ்ப்படிதல் என்ற பாதையில் குருவின் பாத கமலங்களிலிருந்து பாயும் ஆறுதான் நற்குணம்.

275. சீடன் உள்ளத்தில் அதிருப்தி நிலவினுல் அவன் குருவினிடம் முழுமையாகக் கீழ்ப்படியவில்லை என்பதையே காட்டும்.

276. குருவுக்கு நீ வழங்கும் பொருள்களின் அளவுக்குத் தகுந்தபடி அல்லாமல், நீ வழங்கும் ஆர்வம், பாவனை ஆகியவற்றுக்கு ஏற்பவே குரு மகிழ்ச்சியடைகிருர்.

277. சீடன் குருவுக்கு மிகுந்த ஆர்வத்துடனும் விழிப்புடனும் சேவை செய்ய வேண்டும்.

278. நம்பிக்கையோடும் பக்தியோடும் சாதகன் குருவுக்குச் சேவை செய்யவில்லை என்ருல் அவன் மேற்கொள்ளும் எல்லாச் சபதங்களும், விரதங்களும், பச்சை மட்பானையிலிருந்து தண்ணீர் கசிந்து ஒழுகி வீணுவதுபோலப் பயன்படாமல் போகும்.

279. மனத்தையும் பொறிகளையும் கட்டுப் படுத்தல், குருபகவானைத் தியானம் செய்வது, அவருக்குச் சேவை செய்யும்போது பொறுமையாக இருப்பது, சகிப்புத் தன்மை, குருபக்தி, மன நிறைவு, இரக்கம், தூய்மை, உண்மை, ஒளிவு மறைவு, இனிமை, பணிவு, குருவுக்குக் கீழ்ப் படிதல் ஆகியவை யாவும் நல்ல சீடனுக்கு இருக்க வேண்டிய குணநலன்களாகும்.

280. மெய் நாட்டம் கொண்டுள்ளவன் குரு வின் இல்லத்தில் மனத்தையும் பொறிகளையும் கட்டுப்படுத்தி வாழ்ந்து குருவின்கீழ் பெருநம்பிக்கை யோடும் பக்தியோடும் வேதங்களைப் பயில வேண்டும்.

281. அவன் கடுமையான பிரம்மச்சரியத் தைக் கடைப்பிடிக்க வேண்டும்; குருவுக்கு வணக்கங் களைச் செலுத்தவேண்டும்.

282. சீடன் குருவை இறைவனாகவே கருத வேண்டும்; மனிதனாகக் கருதக்கூடாது.

283. கடவுளர் அனைவரின் பிரதிநிதியாகக் குரு இருப்பதனால் அவரிடம் சீடன் குறைகளைக் காணக்கூடாது.

284. சீடன் குருவுக்காகப் பிச்சை எடுத்து வந்து அவருக்குப் பெருநம்பிக்கையோடும் பக்தி யோடும் ஊட்டவேண்டும்.

285. சுகங்கள் அனைத்தையும் சீடன் விஷம் போல் வெறுத்து ஒதுக்கவேண்டும்; குருசேவைக் கென்று தன் உடம்பை அர்ப்பணிக்கவேண்டும்.

286. வேதங்களைப் பயின்றபின்னர் சீடன் குருவுக்குக் குருதக்ஷிணை கொடுக்கவேண்டும்; அவருடைய இசைவுபெற்றுத் தன் வீட்டுக்கு அவன் திரும்பவேண்டும்.

287. குருபீடத்தைச் சம்பாத்தியத்துக்காகப் பயன்படுத்துகிறவன் மதத்தை அழிப்பவனாக இருக்கின்றான்.

288. பிரம்மச்சாரியின் முதன்மையான கடமை குருவுக்கு முழுமனதுடன் வழங்கும் தன்னலமற்ற சேவையாகும்.

289. தவம், புனித யாத்திரை, அறக்கொடைகள் ஆகியவை, குருகிருபையைப் பெறுவதற்கு, அவருக்கு உடம்பால் செய்யும் சேவை, முற்றிலும் கீழ்ப்படிந்திருத்தல் ஆகியவைபோல் உதவுவதில்லை.

290. அறிவின் நான்கு நிரூபணங்கள் வேதங்கள், நேரனுபவம், குருவின் உபதேசங்கள், முடிவு ஆகியவை யாகும்.

291. குருசேவை தவிர மற்ற எல்லாச் செயல்களும் துன்பமாகிய விதையைத் தாங்கியுள்ளன.

292. சீடன் குருவின் கட்டளை நிறைவேற்றுவதற்காக எந்த நேரத்திலும் செல்வம், சுகம், வசதிகள், மகிழ்ச்சி ஆகியவற்றோடு தன் உடம்பையும் கூடத் துறந்துவிடத் தயாராக இருக்கவேண்டும்.

293. உடல், மனம், பொருள் அனைத்தையும் குருவின் காலடியில் சமர்ப்பிக்கின்றவன் குருபக்தியை வளர்த்துக்கொள்ளுகிறான்.

294. குருவின் காலடிகளில் பக்தியை வளர்க்கும் எதுவும் மிக உயர்ந்த தர்மமாகும்.

295. நியமம் என்பது குருமந்திர ஜபம், குருசேவையின்போது கடைப்பிடிக்கும் கடுமையான விரதம், குருவின் உபதேசங்களில் நம்பிக்கை, குருசேவை, மனநிறைவு, தூய்மை, வேதங்களைப் பயில்வது, குருபக்தி அல்லது குருவினிடம் சரணுகதி அடைவது என்பவை யாகும்.

296. திதிக்ஷை என்பது குருவின் கட்டளையை நிறைவேற்றுகையில் ஏற்படும் துன்பத்தை அல்லது வருத்தத்தைப் பொறுத்துக் கொள்ளுவதாகும்.

297. தியாகம் என்பது குருவிஞல் விலக்கப் பட்ட செயல்களைத் தவிர்ப்பதாகும்.

298. உடம்பிஞல் குருசேவை செய்வதன் மூலம் சீடன் தன் மனத்தைக் கட்டுப்படுத்த முடியும்.

299. குரு உண்டபின் மீதமாக இருக்கின்ற உணவு மிகவும் சாத்வீகமான உணவாகும்.

300. மண்ணுலகில் காணப்படும் சாக்ஷாத் கடவுள் குருவே; அவரே உண்மையான நண்பராக வும் உறவினராகவும் இருக்கின்ருர்.